# செந்தமிழ்ச் செல்வி



உள்ளுறை



சிலம்பு-௫௩] வள்ளுவர் ஆண்டு ௨௦௦௯, மார்கழி Jan, 79 [பரல்-௫

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



## "செந்தமிழ்ச் செல்வி"

### விளம்பரக் கட்டணம்
### (ADVERTISEMENT TARIFF)

| | |
|---|---|
| மேலட்டை 4ஆம் பக்கம்-முழுப் பக்கம் (Back Wrapper 4th Page) | ரூ. 100/- |
| மேலட்டை 3ஆம் பக்கம்-முழுப் பக்கம் (Wrapper 3rd Page) | ரூ. 80/- |
| முழுப் பக்கம் (உள்ளே) (Full Page-Inside) | ரூ. 60/- |
| அரைப் பக்கம் (உள்ளே) (Half Page-Inside) | ரூ. 40/- |

## "செந்தமிழ்ச் செல்வி"

### ஆண்டுக் கையொப்பம்
### (Subscription Rates)

உள்நாடு ரூ. 12 00    வெளிநாடு ரூ. 20 00

### ஆயுள் கையொப்பம்

உள்நாடு ரூ. 120 00    வெளிநாடு ரூ. 200 00

# செந்தமிழ்ச் செல்வி
## திங்கள் வெளியீடு

| சிலம்பு ருக | திருவள்ளுவர் ஆண்டு உ௦௦க, மார்கழி சனவரி 1979 | பரல் ரு |
| --- | --- | --- |

## இசைத்தமிழ் வளர்ச்சியும் ஏற்புறு பணிகளும்

பைந்தமிழ் மொழியின் பல்வகைச் சிறப்புக்களுள் அது செம்மை சான்ற மும்மைநலம் வாய்ந்து விளங்குவதும் ஒன்று. தமிழை இயல் இசை நாடகமென முப்பெரும் பாகுபாடுடையதாகச் செப்பமுற வளர்த்து ஒப்பிலா உயர்தனிச் செம்மொழியென உலகம் போற்றுமாறு ஒளிர நிறுத்தினர் நம் முன்னோர். பல்வேறு மொழி களைப் பேசும் மக்கட் கூட்டத்தினர் யாவருக்குமே நாடகமும் இசை யும் இயலும் என்பன இயல்பான வளர்ச்சி நிலைகளே எனினும் மற்றையோரெல்லாம் இசையையும் நாடகத்தையும் தத்தம் மொழி யொடு சார்த்தி வழங்கக் காண்கிலம். நந்தமிழ்ச் சான்றோர் மட்டுமே இயலோடு இசை நாடகங்களையும் மொழியின் பாகுபாடுக ளாகக் கொண்டு முத்தமிழ் என்று சிறப்பித்து வழங்கியுள்ளனர். இசைத்தமிழ் நாடகத்தமிழ் என்னுமாறு போல இசையாங்கிலம் நாடகவாங்கிலம் என்றாயினும், இசைச்சீனம் நாடகச்சீனம் என் றாயினும், வழங்காமை நோக்கற்பாலது. ஏனை மொழிகளும் இத் தகையனவேயாம்.

### முத்தமிழ் :

அகத்தியர் முத்தமிழ் முனிவர் என்றும், அவர் இயற்றியதாகக் கூறப்படும் அகத்தியம் என்னும் இலக்கண நூல் முத்தமிழ் இலக் கணம் என்றும், சிலப்பதிகாரம் முத்தமிழ் இலக்கியம் என்றும் சிறப்புப் பெயர் பெற்றிருத்தலும், 'முத்தமிழால் வைதாரையும் வாழ வைப்பான்' முருகன் என்று முந்துதமிழ் மாலை சந்தமொடு பாடிய

அருணகிரியார் முருகனையும் முத்தமிழையும் ஒருங்கு புகழ்தலும் முத்தமிழின் பழைமையையும் பெருமையையும் புலப்படுத்தும்.

**வாழ்வியற் பாட்டு :**

தமிழ்மக்கள் வாழ்வில் பிறப்பு முதல் இறப்பு முடிய அனைத்துச் சிறப்பு நிகழ்ச்சிகளும், தொழின் முயற்சிகளும், வழிபாட்டு நெறிகளும், விளையாட்டு முறைகளும் முத்தமிழில் நடுநாயகமாய் விளங்கும் இன்னிசையோடு பின்னிப்பிணைந்து கிடக்கின்றன வென்பது, தாலாட்டு நலுங்கு ஒப்பாரி முதலியனவும், நடவுப்பாட்டு ஓடப்பாட்டு ஏர்க்களப்பாட்டு போர்க்களப்பாட்டு முதலியனவும், திருமுறைகள், திருக்கோயில் நாட்பூசை திருவிழா நிகழ்ச்சிகள் மற்றும் கரகப்பாட்டு காவடிப்பாட்டு கொப்பரைப் பாட்டு முதலியனவும், சடுகுடுப்பாட்டு சேவற்பாட்டு கும்மிப்பாட்டு கோலாட்டப்பாட்டு முதலியனவும், இன்ன பிறவும், மணமுரசு, பிணமுரசு, கொடைமுரசு, படைமுரசு முதலிய கருவியிசைப் பெயர்களும் புலப்படுத்தும்.

இசையின் சிறப்பை விளக்குமுகமாக இலக்கியங்களும், தொன்ம (புராண) ங்களும் எடுத்துரைக்கும் உண்மை நிகழ்ச்சிகளும் தொடுத்துரைக்கும் கதைகளும் பலவுள.

**இசைக் கருவிகளும் குடிப்பெயர்களும் :**

தோற்கருவி துளைக்கருவி நரம்புக்கருவி கஞ்சக்கருவி மிடற்றுக் கருவியெனும் ஐம்பாற்பட்ட எண்ணற்ற இசைக் கருவிகளும், பாணன் பறையன் துடியன் கடம்பன் என இசையின் அடிப்படையிலும் இசைக் கருவிகளின் அடிப்படையிலும் நெடிய மரபின் குடிவழிப் பெயர்கள் அமைந்துள்ளமையும், ஈழத்தமிழ் நாட்டில் விளங்கும் யாழ்ப்பாணம் என்னும் மாநகரம் யாழிசை வல்ல பாணனொருவனுக்குப் பரிசாக வழங்கப்பட்டதாக இருக்கலாம் எனக் கருதப்படுவதும் தமிழர் தம் இசைக்கலை ஈடுபாட்டின் பரப்பையும் சிறப்பையும் உணரப் போதுமானவையாகும்.

**திருக்கோயில்கள் :**

தமிழர்தம் வழிபாட்டு நெறிகளெல்லாம் இசையோடு பெரிதும் தொடர்புடையன வென்பது அறியத்தக்கது. இன்று, சிற்பக்கலைக்கும் கல்வெட்டுக்களுக்கும் நிலைக்களமாய் விளங்கும் தமிழர்தம் திருக்கோயில்களே இன்றுகாறும் மரபுவழிப்பட்ட தமிழிசையையும், எண்ணற்ற இசைக் கருவிகளையும் பேணிப் பாதுகாத்து, இயன்ற மட்டும் வழங்குவித்துக் கொண்டும் இருக்கின்றன. திருமுறை ஓதுவார்கள் இலரேல் பண்ணெனப்படுவது

இன்னதென்றே தெரியாமல் போயிருக்கும். மதுரை, சுசீந்திரம், நெல்லை முதலிய ஊர்களிலுள்ள திருக்கோயில்களில் ஒற்றைக் கல்லில் வெட்டப்பட்டும் பல்வேறு இன்னோசை எழுப்பும் இசைத் தூண்கள் உள்ளமையும் குறிப்பிடத்தக்கது.

**பாச்செய்யுளும் பண்ணமைப்பும் :**

தமிழில் அமைந்த எழுவகைச் செய்யுளுள் பெருகிய வழக்குடைய பாட்டும் உரையும் என்னும் இரண்டனுள்ளும் உரைச் செய்யுள் இக் காலத்துப் பல்கிப் பரந்து நடையிடினும், பண்டைக் கால முதல் சென்ற நூற்றாண்டுகாறும் எழுந்த நூல்களெல்லாம் பல்வேறு வகையான ஓசை தழுவிய பாவும் பாவினமுமாய் அமைந்த பாச்செய்யுள்களேயாம்.

கழக இலக்கியங்களுள் ஒன்றான பரிபாடலின்கண் அமைந்துள்ள பாக்களெல்லாம் பண்வகுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் பாடல் இயற்றியவர் பெயரும், பண்வகுத்தவர் பெயரும், பண்ணின் பெயரும் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. சிலப்பதிகாரம் இசைத்தமிழ்ப் பெட்டகமாக விளங்குகின்றது.

பண்ணுந் திறமுந் தூக்குந் தாளமுமென எண்ணற்ற நுண்ணிய பாகுபாடு செய்யப்பட்டுக் கட்டுக்கோப்பாய் அமைந்துள்ள பெருமை வாய்ந்தது தமிழிசை. சுவைகட்கும் மெய்ப்பாடுகட்கும் ஏற்ற பண்கள் அல்லது அவற்றைத் தோற்றுவிக்கும் பண்கள் இவையென்றும், பொழுதுக்கேற்ற பண்கள் இவையென்றும், கண்டறிந்து வகைப்படுத்தியும் வரையறுத்தும் இலக்கணம் அமைத்துள்ள பாங்கு தமிழிமொழியின் தனிச்சிறப்பினைப் புலப்படுத்தும்.

**“பண்ணென்னும் பாடற் கியைபின்றேல் கண்ணென்னும்
கண்ணோட்டம் இல்லாத கண்”**

என்னும் திருக்குறளும் ஈண்டு நோக்கற் பாற்று. கல்லைப் பிசைந்து கனியாக்கும் வல்லமை திருமுறைக் கமைந்தது பொருட் சிறப்பினால் மட்டுமன்று ; இசையொடு புணர்ந்த ஏற்றத்தினாலுமேயாம்.

**வியத்தகு புதுமைகள் :**

இறைவன் இசைவடிவாகவும் இசையின் பயனாகவும் விளங்குகின்றான் என்று அவனைப் புனைந்துரை வகையான் புகழ்ந்துரை செய்தனர் நம் முன்னோர். நோய் நீக்கி நலம் பயக்கும் அமிழ்தனைய ஆற்றல் வாய்ந்த தெய்வத்தன்மையுடையது இசை என்பது ஆராய்ச்சியாளர் கூற்று. இசை (மேகராகக் குறிஞ்சி என்னும்

பண்) வான்மழையும் பொய்விக்கும் பான்மைய தொன்பது இசை வல்லார் கொள்கை.* இன்னிசையால் பயிரினங்கள் தளிர்க்கின்றன வென்பது மெய்ப்பிக்கப்பட்டுள்ளது. அஃறிணை உயிரிகளையும் தன்வயப்படுத்தும் தனித்திறம் வாய்ந்தது இசை.

**இறைமையும் இசையும் :**

மக்கள் தம் மனவுணர்வைப் பண்படுத்தி, ஒருமைநெறியிற் செலுத்தி இறைமைநிலையில் திளைப்பிக்கும் பெருமை வாய்ந்த பெற்றிமையால் இசைப் பயிற்சியும் ஒருவகை யோக முயற்சியே யாம். அருந்தவக் கோலத்தினனாய் வீற்றிருக்கும் ஆலமர்செல்வன் (தட்சிணாமூர்த்தி) கையில் வீணை இடம்பெற்று விளங்குதல் இதனைக் குறிப்பாற் புலப்படுத்தும். ஐந்தொழில் நிகழ்த்தும் அம்பலவாணப்பெருமான் திருக்கையில் படைப்புத் தொழிலுக்கு அறிகுறியாக விளங்குவது இன்னிசையால் ஓங்கார மெழுப்பும் 'துடி' என்னும் இசைக்கருவியே. இவ் வுண்மைகளை உன்னி யுணரின் தமிழ்ப் பெருமக்கள் இசைக் கலையை எத்துணை உயரிய நிலையில் வைத்துப் போற்றினர் என்பது புலனாம்.

உலகின் முதன்மொழியும் உயர்தனிச் செம்மொழியும் இயற்கையே தோன்றிய நன்மொழியுமான தமிழின் ஒரு கூறாக விளங்கும் தமிழிசையின் தொன்மை வரம்பு படுத்தி உரைக்கற்பால தன்று. இயற்றமிழின் தோற்றமே இன்ன காலத்ததென வரையறுக்க வியலாதெனின் அதற்கு முந்து நிலையினதான இசைத் தமிழின் தொன்மை சொல்லாமலே விளங்குமன்றே. 'எகித்தியம் உட்பட உலகிசை அனைத்திற்கும் தமிழிசையே தாய்' என்பது ஆராய்ச்சி வல்லுநர்கள் கண்ட முடிபு. உலகெங்கணும் இன்று வெவ்வேறு வடிவினவாய் விளங்கும் பற்பல இசைகளும் மாந்தன் பிறந்தகமான குமரிநிலப் பரப்பினின்றும் ஆங்காங்குச் சென்று பரவிய மக்கட் கூட்டத்தினரால் பல படியாகத் திரிபுபடுத்தப்பட்ட தமிழிசையேயாம்.

1-1-1979 அன்று முத்தமிழ்ப் பேரவையினரால் 'இயற் செல்வம்' என்று பட்டமளிக்கப் பெற்ற பேராசிரியர் க. அன்பழகனார் அவர்கள் தமது ஏற்புரையில், 'இசையும் கூத்தும் தமிழ்மொழியின் வடிவங்களாகத் திகழ்கின்றன வென்றும், இச் சிறப்பு உலகில் வேறு எம் மொழிக்கும் இல்லையென்றும், உலக இசைகளுக்கெல்லாம் அடிப்படை நமது தமிழிசையே என்றும் மிகச் சிறந்த இசைக் கலை ஆராய்ச்சியாளர்களே ஒப்புக் கொள்கிறார்கள்' என்றும் பெருமிதம் பொங்கக் குறிப்பிட்டுள்ளார்.

---

* மேகராகக் குறிஞ்சிப் பண்ணால் அமைந்துள்ள தேவாரத் திருப் பாடல்களையும், மழை தொடர்பான மற்றும் பல அரிய பாக்களையும் தொகுத்து 'மழை வேண்டல்' என்னும் நூலைக் கழகம் வெளியிட்டுள்ளது.

**இசைத்தமிழின் இறங்குமுகம் :**

பல்லாற்றானும் சிறப்பு வாய்ந்த பைந்தமிழிசை கடைக்கழகக் காலத்திற்குப் பின் தமிழ்நாடு அயலவர் ஆட்சிக்குட்பட நேர்ந்தமை யால் உருச்சிதையயும் நிலை உருவாயிற்று. கி. பி. 7ஆம் நூற்றாண்டில் திருஞான சம்பந்தர் முதலிய பெருமக்கள் இறைவனருளால் தோன்றித் தமிழிசைக்குப் புத்துயிரளித்து வளப்படுத்தி யாண்டும் பரப்பினர். ஆயினும் கி. பி. 10ஆம் நூற்றாண்டுக்கு மேல் இசைக்கலை மறையத் தொடங்கியது தமிழ்நாடு பல்வேறு இனத்தார்க்கும் தொடர்ந்து அடிமைப்பட நேர்ந்தமையால் தமிழ் மக்கள் தம் மொழியையும் கலை நாகரிகங்களையும் செம்மையாகப் போற்றிக் காப்பாற்றிக் கொள்ள இயலவில்லை.

இசை நுணுக்கம், சிற்றிசை, பேரிசை, தாளவோத்து, முதலியனவான பழந்தமிழ் இசை நூல்களெல்லாம் இறந்துபட்டன. தமிழிலக்கிய இலக்கணங்களெல்லாம் மிக்கெடுத்துப் பேசும் யாழ் இன்று நம்மிடையே இல்லை; யாழிசைக்கு மயங்கி வேறிசையைக் கேட்கமாட்டாது உயிர் துறந்த அசுணமா இனமே உயிர்துறந்தொழிந்து விட்டது.

> "குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
> மழலைச்சொல் கேளா தவர்"

என்றவிடத்துத் திருவள்ளுவரால் புகழ்ந் துரைக்கப்பட்ட யாழே அழிந்துவிட்டதை நோக்க இன்னும் எத்தனை யெத்தனை இசை நூல்களும் இசைக் கருவிகளும் அழிந்துபட்டனவோ என்று ஏங்க வேண்டியுள்ளது. இப்போது இருக்கும் எத்தனையோ இசைக் கருவி களுள் பெரும்பாலன காட்சிப் பொருள்களாகவே இருக்கின்றன. அவற்றை இசைக்குந் திறமுடையார் அரியர்.

தமிழிசை தமிழ்நாட்டிலேயே, தமிழர்களாலேயே புறக் கணிக்கப்படும் நிலை உருவாயிற்று. தமிழிசையின் திரிபாய்த் தெலுங்குப் பாடல்களைக் கொண்டுள்ள இசை கருநாடக இசை (கருநாடகம்—பழைமை) என்னும் பெயரில் தலையெடுத்தது. தமிழிசைக் கருவிகளை இசைப் போரும், தமிழிசையைப் பாடுவோரும் கீழ் மக்களாகக் கருதப்பட்டனர்; ஒதுக்கிவைக்கப்பட்டனர். இசையரங்குகளில் யாண்டும் வேற்றுமொழிப் பாடல்களே போற்றிப் பாடப்பட்டன. தமிழ்த் தாத்தா பர். உ. வே சா. அவர்கள் தாம் இளம்பருவத்தில் கேட்ட இசைப்பாக்களையெல்லாம் பிற்காலத்தில் கேட்க முடியவில்லை என்றும், இசைவாணர்களால் தமிழிசை புறக்

கணிக்கப்பட்டதே காரணம் என்றும் வருந்திக் கூறியுள்ளமை நோக்கத்தக்கது. தமிழிசை, தமிழ்ப்பாடல்கள் சில்லறை, துக்கடா என்னும் பெயர்களில் இழிவு படுத்தப்பட்டன. இச் சில்லறை துக்கடாக்கள் இசையரங்க நிகழ்ச்சியின் இறுவாயில் பாடத்தொடங்கும் போதே அவற்றைக் கேட்பது தமது இசைநுகர் திறத்திற்கு இழுக்காகும் என்று எண்ணிப் பெரும்பாலோர் எழுந்து வெளியே செல்வது வழக்கமான நிகழ்ச்சியாகத் தொடர்ந்தது.

> "என்னருமைத் தமிழ்நாட்டை எழிற்றமிழால்
> நுகரேனோ செவியில் யாண்டும்
> கன்னல்நிகர் தமிழிசையே கேளேனோ
> கண்ணெதிரில் காண்ப தெல்லாம்
> தன்னேரில் லாததமிழ்த் !தனிமொழியாய்க்
> காணேனோ இவ்வை யத்தில்
> முன்னேறும் மொழிகளிலே தமிழ்மொழியும்
> ஒன்றெனவே மொழியே னோநான் !"

என்னும் பாவேந்தர் பாரதிதாசனாரின் பாடல் ஈண்டு நோக்கத் தக்கது.

**இசைத்தமிழ் எழுச்சி:**

இந் நிலைகளைக் கண்டு உண்மைத் தமிழ்ப்பற்றாளர் உள்ளங் குமைந்தனர். தமிழிசை உய்யுமாறு தாம் செய்வதறியாது திகைப் புற்றுக் கலங்கிக் கையற்று நின்றனர். இந் நிலையில் தமிழிசையைக் காக்கவும் வளர்க்கவும் எழுச்சியொடு முன்வந்தார் ஏந்தல் அண்ணாமலையரசர் ''யாரும் தமிழிசையைப் பாடாவிட்டால் நான் பாடுகிறேன்'' என்று பெருமிதமாக முழங்கினார். ''தமிழ்நாடெங்கும் தமிழிசையே முழங்க வேண்டுமென்பது எனது ஆவல்'' என்று தம் உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்தும் அரசர் அவர்கள் தமிழிசை வளர்ப்பதைத் தம் வாழ்நாட் பெரும் பணிகளுள் ஒன்றாகக் கொண்டு முயன்றார்.

இந்திய நடுவணரசின் பொருள்துறை அமைச்சராக இருந்தவரும், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் மேனாள் துணைவேந்தருமான வயவர் பர். இரா. க. **சண்முகம் செட்டியார்** அவர்கள் அண்ணாமலை யரசின் இசைத்தமிழ் வளர்ச்சிப் பணிகளுக்கு உறுதுணை நின்றும் அரும்பணி யாற்றினார்.

**தமிழிசைச் சங்கம்:**

1943 இல் **தமிழிசைச் சங்கம்** என்னும் பெயரில் ஓர் அமைப்பை அண்ணாமலையரசர் நிறுவினார்கள். பத்து ஆண்டுகட்குப் பின்னர்

1953 இல் ''அண்ணுமலை மன்றம்'' என்னும் பெயரில் சென்னை மாநகரின் முதன்மையான இடத்தில் தமிழிசைச் சங்கத்திற்கு ஒரு கட்டிடம் எழுப்பப்பட்டது. இப்பொழுது வளிவரை (A. C.) செய்யப் பட்டுள்ள இம் மண்டபம் **அவைத்தலைவன்** (சபாநாயகன்) என்னும் சிறப்புப்பட்டம் பெற்றுள்ளது.

**இன்னிசை விழாவும் பண்ணுராய்ச்சியும் :**

தமிழிசைச் சங்கத்தின் சார்பில் ஆண்டுதோறும் பன்னிரு நாள்கள் **இசை விழா** நடத்தப்படுகின்றது. கடந்த இருபத்தெட்டு ஆண்டுகளாக அந் நாள்களில் நான்குநாள் முற்பகற்போதில் **பண்ணுராய்ச்சி மாநாடு** நடத்தப்படுகின்றது. இசைத்தமிழ்ப் பேரா சிரியர்களும், இசைத்தமிழ் வல்லுநர்களும், சிறப்பாகப் பண்ணிசை ஓதுவார்களும், நாடக நாட்டியக் கலைவாணர்களும் இம் மாநாட்டில் கலந்துகொண்டு ஆராய்ச்சியில் ஈடுபடுகின்றனர்.

**இசைப் பேரறிஞர் :**

1957 ஆம் ஆண்டு முதல் தமிழிசைச் சங்கம் தலைசிறந்த இசைவல்லுநர்கட்கு **இசைப்பேரறிஞர்** என்னும் பட்டம் வழங்கிப் பாராட்டிச் சிறப்பிக்கின்றது. முதலாண்டில் மட்டும் மூவர் இப் பட்டம் பெற்றுள்ளனர். பின்னர் ஆண்டுதோறும் ஒவ்வொருவர் இப் பட்டம் வழங்கப் பெறுகின்றனர். இவர்களுள் குரலிசை வாணர்களும், கருவியிசை வல்லுநர்களும், இசையாராய்ச்சியாளர் களும் உளர். 1948 முதலே ஆண்டுதொறும் **கோபாலகிருட்டிண பாரதியார் பாடற் போட்டி** நடத்தி அதில் வெற்றிபெறும் ஒருவருக்குச் **சக்கரவர்த்தி இராசகோபாலச்சாரியார்** பெயரில் தம்புரா ஒன்று பரிசாக வழங்கப்பட்டு வருகின்றது.

அரசர் அண்ணுமலைமன்றத்தில் மாலைநேர **இசைக்கல்லூரி** ஒன்றையும் தமிழிசைச் சங்கம் நடத்தி வருகின்றது. இசைக் கல்லூரி நூலகம் ஒன்றும் சிறப்புற இயங்கி வருகின்றது.

**புதிய தலைவர் :**

இவ்வாறு இசைத்தமிழ் வளர்ச்சிக்குப் பல்லாற்ருனும் பணி யாற்றிவரும் தமிழிசைச் சங்கத்தின் தலைவராக மேனுள் உயரற மன்ற நடுவர் திருமிகு **மகராசனூர்** அவர்கள் இவ் வாண்டில் பொறுப் பேற்றுள்ளார்கள். தமிழில் சிறந்த ஆர்வமும் ஈடுபாடுங்கொண்ட அவர் தமிழிசை வளர்ச்சிக்கு மேன்மேலும் தக்கபணி ஆற்றுவார் என்று நாம் உறுதியாக நம்பலாம்.

**மெய்யுணர்வு விழா :**

இவ்வாண்டில் தமிழிசைச் சங்கம் 36ஆவது ஆண்டு நிறைவெய்தியுள்ளது. அண்மையில் அதன் முப்பத்தாறுவது ஆண்டு விழா சிறப்புற நிகழ்ந்தது. திருக்குறளில் முப்பத்தாறுவது அதிகாரம் மெய்யுணர்வாக அமைந்து விளங்குதலானும், சிவநெறிச் சான்றோர் முடிந்த முடிபாகக் கண்டுணர்த்திய மெய்ப்பொருள்கள் முப்பத்தாறேயாதலானும் முப்பத்தாறுவது ஆண்டு நிறைவை **மெய்யுணர்வு** விழாவாகக் கொண்டாடலாம். இங்ஙனம் வகுத்து அருட்டிரு **அழகரடிகளார்** ஒரு விழாவும் கொண்டாடினர். இது பற்றி மேலும் அறிய விழைவோர் செந்தமிழ்ச் செல்வியில் (சிலம்பு : 53 பரல்: 3) கழக ஆட்சியாளர் அவர்கள் எழுதியுள்ள கட்டுரையைப் பார்க்க. ஆகவே தமிழிசைச் சங்கத்திற்கு இவ்வாண்டு மெய்யுணர்வு விழா ஆண்டாகும். அதற்கேற்பச் சங்கம் தமிழிசை வளர்ச்சிக்கு மேலும் பல விரிவான திட்டங்கள் வகுத்துச் சிறப்புறச் செயலாற்றும் முனைப்பொடு **உட்குழு** ஒன்றை அமர்த்தியுள்ளது. தமிழிசை தழைத்து வளரும் என்பது ஒருதலை.

**மதுரையில் சங்கம் :**

'தந்தையறிவு மகனறிவு' என்பதற்கேற்பத் தந்தையின் பணியே தம் பணியாகக் கொண்டு இப்போதைய செட்டி நாட்டரசர் அரசவயவர் முத்தையச் செட்டியார் அவர்கள் மதுரை நகரிலும் தமிழிசைச் சங்கம் ஒன்றை நிறுவியுள்ளார்கள். பெரும் பொருட் செலவில் அச் சங்கத்திற்கெனத் தனிக்கட்டிடம் ஒன்று அங்கு எழுப்பப்பட்டு வருகிறது.

**இயலிசை நாடக மன்றமும் முத்தமிழ்ப் பேரவையும் :**

கலைஞர் கருணாநிதி அவர்களை முதலமைச்சராகக் கொண்ட மேனாள் தமிழ்நாட்டரசு **இயலிசை நாடக மன்றம்** என்னும் பெயரில் ஒரு பெருமன்றத்தை நிறுவியுள்ளது. இப்பொழுது உயரறமன்ற நடுவர் திருமிகு **கோகுலகிருட்டிணன்** அவர்கள் இம் மன்றத்தின் தலைவராக விளங்குகின்றார்கள். இம் மன்றமும் ஆண்டுதொறும் முத்தமிழ்க் கலைவிழாக்கள் கொண்டாடியும் தக்கார்க்குக் **கலைமாமணி** என்னும் பட்டம் வழங்கியும் சிறப்புறப் பணியாற்றி வருகின்றது. **முத்தமிழ்ப் பேரவை**யினரும் இத்தகைய விழா நிகழ்ச்சிகள் நடத்தியும் தக்கார்க்கு **இயற்செல்வம்** என்னும் பட்டம் வழங்கிப் பாராட்டியும் பணியாற்றி வருகின்றனர்.

**இசைத்தமிழ் ஆராய்ச்சி :**

மறையுண்டுபோன இசைத்தமிழிலக்கணத்தை அண்மைக் காலத்தே ஆராயும் அருமுயற்சியில் ஈடுபட்டவர்களுள் குறிப்பிடத்

தக்க சிறப்பு வாய்ந்தவர்கள் சிலரேயாவர். தஞ்சை ஆப்பிரகாம் பண்டிதர் அவர்கள் கருணாமிர்த சாகரம் என்னும் அரிய நூலை உருவாக்கினர்; ஆயப்பாலை வட்டப்பாலை திரிபு முறைகளைக் கண்டார். மதுரைப் பொன்னுசாமிப் பிள்ளை அவர்கள் தாய்ப்பண்கள் (மேளகர்த்தாக்கள்) பற்றி ஆராய்ந்து, அவை முப்பத்திரண்டே என்றும், இசையிடங்கள் (சுரத்தானங்கள்) பன்னிரண்டே, பதினாறல்லவென்றும் கண்டார். விழுமிய ஆராய்ச்சியாளரான தவத்திரு விபுலானந்த அடிகளார் யாழைப்பற்றி ஆராய்ந்து யாழ்நூல் உருவாக்கினர். கோவை இசையணிகலம் (சங்கீதபூஷணம்) இராமநாதன் அவர்கள் சிலப்பதிகாரத்திசை நுணுக்க விளக்கம் என்னும் நூலை உருவாக்கினர்; மயங்கா மரபின் இசைமுறை காட்டிக் குரலே சட்சம் என்னும் பழங்கொள்கையை நாட்டி முல்லைப்பண் மோகனம் என்று கண்டார். ஆராய்ச்சி வல்லுநர் கு. கோதண்டபாணிப் பிள்ளை அவர்கள் ஐந்திசை முறை ஏழிசையிற் கிளையாய்ந்து வகுத்ததே என்றும், பேரிசைகளே அமைந்த ஏழிசை முறையும், பேரிசையும் சிற்றிசையும் கலந்த பன்னீரிசை முறையும் இவற்றின் இடைவெளிகளான இருபத்தீரலகு முறையும் தொன்றுதொட்டு வரும் தமிழிசை மரபே யென்றும் தம் பழந்தமிழிசையில் வலியுறுத்தியுள்ளார்.

## புதையல் கிட்டியது!

மறைந்துபோன தமிழ்நூல்களின் பட்டியில் இடம்பெற்றிருந்த பஞ்சமரபு என்னும் அரிய இசைத்தமிழ் இலக்கண நூல், வேலம் பாளையம் புலவர் தெய்வசிகாமணிக் கவுண்டர் அவர்களின் அரு முயற்சியாலும், ஏழிசைத் தலைமகன் குடந்தை ப. சுந்தரேசனர் அவர்களின் நன்முயற்சியாலும், பொள்ளாச்சி வள்ளல் மகாலிங்கம் அவர்களின் பொருட்கொடையாலும் கடந்த சில யாண்டுகட்கும் முன்னர் வெளிப்பட்டுத் தமிழ் நெஞ்சினரை யெல்லாம் இன்பக் கடலில் ஆழ்த்தியது.

## ஒளிமயமான எதிர்காலம்:

இவையெல்லாம் இசைத்தமிழ் எதிர்காலத்தில் செழித்தோங்கி வளருதற்கான நல்லறிகுறிகளாகக் கொள்ளலாம். ஆயினும் மேற் கூறிய மன்றங்களும், பல்கலைக்கழகங்களும், தமிழ்நாட்டரசும், மேலும் திட்டமிட்டு ஆக்கமுறையில் செய்யத்தக்க இன்றியமையாப் பணிகள் பலவுள:

## இசைத்தமிழ்க் களஞ்சியம்:

இசைத்தமிழ்க் குறியீட்டுச் சொற்கள், பண் தாளம் முதலியவற்றின் பெயர்கள், அவற்றுக்கு வழக்கத்திலுள்ள வேற்றுமொழிப்

பெயர்கள், இசைக் கருவிகள், இசைத்தமிழ் இலக்கண இலக்கியங்கள் முதலியன பற்றிய அனைத்துச் செய்திகளையும் தொகுத்து, நல்ல தமிழ்நடையில் விளக்கம் வரைந்து, தேவையான படங்களுடன் **இசைத்தமிழ்க் களஞ்சியம்** ஒன்று வெளியிடுதல் வேண்டும்.

**இசைப்புலவர் வரலாறு :**

புகழ்பெற்ற சிறந்த இசைவாணர்கள், இசைத்தமிழ் ஆராய்ச்சியாளர்கள் ஆகிய பெருமக்களுடைய வரலாற்றைத் தொகுத்து உருவப்படங்களுடன் இசைப்புலவர் வரலாறு வெளியிடுதல் வேண்டும்.

**உலகெலாம் பரவுக !**

தகுதி வாய்ந்த இசைவாணர்கள் பிறமொழிகள் பயில விரும்பின் தேவையான உதவித்தொகை வழங்கிப் பயிலச் செய்து பிற மாநிலங்களுக்கும், அயல்நாடுகளுக்குஞ் சென்று தமிழிசையினைப் பயிற்றவும், தமிழிசைச் சிறப்பினைப் பரப்பவும் ஆவன செய்தல் வேண்டும்.

**ஆராய்ச்சி வளர்க !**

ஆராய்ச்சியாளர்கள் தமிழிசையையும் தமிழ்நாட்டில் வழங்கும் வேற்றுமொழி இசையையும், திரவிட நாடுகளிலும், தமிழ் வழங்கும் அயல்நாடுகளிலும், மற்றும் உலகெங்கணும் வழங்கும் பல்வேறு வகைப்பட்ட இசைக்கலையைப் பற்றியும், தமிழிசைக்கும் அவற்றுக்கும் உள்ள தொடர்பு அல்லது தொடர்பின்மை பற்றியும் அவற்றின் வளர்ச்சி நிலைகள் திரிபு நிலைகள் பற்றியும் வல்லாங்கு ஆராய ஆவன செய்தல் வேண்டும். உலக இசைகளுக்கெல்லாம் தமிழிசையே தாய் என்னும் முன்னை ஆராய்ச்சியாளர்கள் கண்ட உண்மையை மேன்மேலும் ஆழ்ந்தகன்ற ஆராய்ச்சிகளான் வலிமையுறச் செய்தல் வேண்டும். அத்தகைய அறிவுவளமும் பேருழைப்பும் வாய்ந்தார்க்கே ஆராய்ச்சிச் சிறப்புப் பட்டங்கள் வழங்கல் வேண்டும்; ஊக்குவிக்க வேண்டும். எளிய நிலையில் சிற்சில நூல்களைப் புரட்டிச் செய்திகளைத் திரட்டி எழுதி ஆராய்ச்சிப்பட்டங்கள் பெறும் இழிநிலை ஒழியவேண்டும்.

இன்னோன்ன திட்டங்களை வகுத்துச் செயற்படுத்துதல் நம் அருமைத் தமிழ் - இசைக்கலை செழித்து வளர்ந்து சிறப்புறுதற்குத் தக்க வழியாம். உரியவர்கள் நன்கு எண்ணி ஏற்புறு வகையில் ஆவன செய்வார்களாக !

# சிவஞானபோத ஆராய்ச்சி

[அருட்டிரு அழகரடிகள்]

(சிலம்பு ௫௬, பரல் ௪, ௧௬௬-ஆம் பக்கத் தொடர்ச்சி)

இனிச், 'சி' என்பது 'சிவம்' என்னுஞ் சொல்லின் முதலெழுத்து ; 'வா' என்பது, 'வா' என்னும் அழைப்புச் சொல்லின் முதல் எழுத்து ; 'ய' என்பது, யான் என்னும் ஆன்மச் சொல்லின் முதலெழுத்து ; 'ந' என்பது எழில் மாயையாகிய நன்மைச் சொல்லின் முதலெழுத்து ; 'ம' என்பது, 'மலம்' என்னும் சொல்லின் முதலெழுத்து. இங்ஙனம் ஐந்தும் ஐந்து சொற்களின் முதல் எழுத்துக்கள் ; திருவைந்தெழுத்து ஐந்தும் 'ஐந்து சொல்' என்பது, சுந்தரர் தேவாரத்திலும் வருகிறது. தமிழ்மொழியில் இவ்வைந்தெழுத்துக்களும், மொழிக்கு முதலில் வரக்கூடிய எழுத்துக்களே! சொற்களைக் குறிப்பதற்கு முதலெழுத்தை ஓர் அடையாளமாகக் கொள்ளும் தமிழ் வழக்கும் உண்டு. 'நற்புலவர்' என்னும் நன்மைச் சொல்லுக்கு 'ந' அடையாள எழுத்தாக வரும். 'நக்கீரர்' 'நச்செள்ளையார்' 'நத்தத்தனார்' 'நப்பண்ணனார்' முதலிய பெயர்களில் இவ் வழக்கைக் காணலாம். இங்ஙனம் திருவைந்தெழுத்துத் தமிழ்ச்சொல்லில் 'சிவ' என்னும் ஆண்டவனது சிறப்புப் பெயரும் வருகின்றது. பலமுறை திருவைந்தெழுத்து மறையை உருச் செய்தால் பலமுறை முதல்வன் பெயரையுங் கூறினாற் போலாகும். ''சிவசிவ'' என்றிடத் தீவினை மாளும்.

திருவைந்தெழுத்துக்கள் இங்ஙனம் தூல, நுட்ப, மிகுநுட்பமென மூன்று வகையாகத் 'திருமந்திரம்' முதலிய சிவநெறி நூல்களில் வரும். தூலம், நுட்பம், காரணம், மகாகாரணம், முத்தி என ஐந்து வகையாகத் திருவைந்தெழுத்தைக் கூறுதல் சைவ முறையன்று. காரணம், மகாகாரணம், முத்தி என்பவற்றை ஒரே வகையாக முத்தித் திருவைந்தெழுத்தென்று கூறுதலே சிவமரபு ; காரணத் திருவைந்தெழுத்தை மூலத் திருவைந்தெழுத்து எனக் கூறுதலும் உண்டு. முடிவில், எழுத்துக்களைப் பற்றிய நினைவுகள் இல்லாமல் முத்தித் திருவைந்தெழுத்தின் கருத்துக்களைத் தேறுதல் வேண்டும். இறைவனுக்குப் பெயர் 'சிவம்' எனக் கூறுதலின் பொருத்தம், முன்பு விளக்கப்பட்டது.

'விதிப்படி' என்பதற்கு முத்தித் திருவைந்தெழுத்தைப் பதி ஞான உணர்வால் தேனித்தல் என்பது பொருள் ; உணர்வால்

தேனித்தாலும் நாவினுல் மெல்லச் சொன்னுலும் பிறர் கேட்க ஓதினுலும், திருவைந்தெழுத் தென்ருல் உருச்செய்தல் (திரும்பத் திரும்பப் பன்முறை எண்ணுதல்) என்று பொருளாதலின், பொதுவாக 'உச்சரித்தல்' என்றே சொல்லப்படும். நூற்பாவில் 'எண்ணும்' எனவும், மேற்கோளில் 'உச்சரிக்க' எனவும் வந்தமை காண்க.

பதிஞானம் உண்டான பின்பும் ஏன் எண்ண வேண்டுமென்ருல், ஆன்ம உணர்வில் முன் பழக்கத்தால் அசத்து மேலிடுதல் சகலர்க்கு இயல்பாதலின், பதிஞானம் பெருகும் பொருட்டும், நிலைகொள்ளும்பொருட்டும், சிவத்தையே எய்தும் பொருட்டும், இவ்வாறு திருவைந்தெழுத்துத் தேனிக்க வேண்டுவதை ஆசிரியர் விதித்தார். ஓர் இனிய பழச் சுவையில் புழுவை இருத்தினுலும் அது, முன் பழக்கத்தால் கசப்பு மிக்க வேப்பம் பழத்தையே நாடுதல் போல, முன் பழக்கங் காரணமாக ஆன்மாவும் அசத்தை நாடுவதில் திரும்பக் கூடும்; திரும்பாதபடியும், பரந்த உணர்வாகிய பதிஞானத்திலேயே நிலைகொள்ளும்படியும், இத் திருவைந்தெழுத்துத் தேனிப்பு இன்றியமையாததாயிற்று. இக் கருத்தை, மேற்கோளுக்கு ஏதுவாக ஆசிரியர் கூறிக்கொண்டார்.

இதனை வகையாக விளக்கும் பொருட்டுத், திருவைந்தெழுத்து முறையில் தேனிக்கும் வகையை, மூன்று விளக்கச் செய்யுட்களால் ஆசிரியர் இப் பிரிவில் தெளிவு செய்கிருர்.

**முதல் செய்யுள் :**

> *"அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டரனை*
> *அஞ்செழுத்தால் அர்ச்சித் திதயத்தில்,—அஞ்செழுத்தாற்*
> *குண்டலியிற் செய்தோமம், கோதண்டம் சானிக்கில்,*
> *அண்டனும் சேடனும் அங்கு."*

திருவைத்தெழுத்தின் கருத்துக்களை முதலில் அறிந்துகொள்ளவேண்டும். அறிந்துகொண்டால், உயிர் சிவத்துக்கு உடைமையாதல் தெரியும்; மலம் என்னும் அசத்தை விட்டு நீங்கிச் சிவத்தை அடைய உயிர் எழுச்சி கொள்ளும்; சிவபெருமானை வழிபடவும் அறிந்துகொள்ளும்; முத்தித் திருவைந்தெழுத்தின் பொருள் முறையால் இத் தெளிவுகளெல்லாம் பிறத்தலின், பதிஞானம் மேல் மேலும் விளங்கும்.

திருவைந்தெழுத்தின் வழிபாடாதலால், அது அக வழிபாடாகும். 'எண்ணும்' இடம் நெற்றி நடு; வழிபடும் இடம் இதயம்; அந்த வழிபாட்டில் ஓமம் செய்யும் இடம் கொப்பூழ்; ஐந்

தெழுத்தின் விளக்கத்தில் இறைவனைத் தெரிந்துகொண்டு, இதயத்தில் அவனை இருத்தி, எட்டுக் குண மலர் தூவித் திருவைந் தெழுத்து மந்திரத்தால் வழிபாடு செய்யவேண்டும். அந்தத் திரு வைந்தெழுத்தினலேயே கொப்பூழில் ஓமமும் அதன்பின் செய்ய வேண்டும்; இவ்வாற்ருல், 'சிவாயநம' என்னும் நுட்பத் திருவைந் தெழுத்தையும் பலமுறை மெல்ல உச்சரித்ததாய் முடியும்.

ஓமம் என்பது ஞான அனல்; குண்டலி என்பது குண்டலி யிடம்; அதாவது உந்தி! ஞான அனலை ஓமம் செய்தால் அதற்கு நெய் விடவேண்டும். அந்த நெய் நெற்றி நடுவில் மின் அமிழ்த மாய் இருக்கிறது. அந்த நெய்யை விட்டு உந்தியில் ஞான அனலை எழுப்பினல், உச்சி வரையில் இருக்கும்; ஒளி நாற்புறமும் மிகும்.

மூல உடம்பின் முதுகெலும்பினூடு ஓர் ஒளிநாடி மேலே போகிறது. அதன் வழியாக ஞான அனல் ஓங்கும். இடப்பக்கம் மூக்கின் வழியாக வெளியிலிருந்து வாங்கும் உயிர்க் காற்ருகிய மூச்சு, உந்தியிற் சென்று ஞான அனல் ஓங்க உதவி செய்யும்; 'சுழிமுனை' என்னும் ஒளி நாடியும், இடப்பக்க மூச்சும், என இரண்டும் 'ஓம்' என்னும் குண்டலி அனலை எழுப்பும் பொருட்டுத், தலையின் அமிழ்த நெய்யை ஊற்றச், சுருக்குச் சுருவங்களாய்ப் பயன்படும்.

இவ்வாறு இதயத்தில் இறைவனை இயக்கக் கடவுளாக அம்பல வாணரை வழிபட்டு, அதற்கு உந்தியிடத்தில் ஓமம் செய்து, முத்தீ வேள்வி யொளிபோல் ஒளியுடம்பு பெற்று. அதுவரையில் நுட்பத் திருவைந்தாய்ப் பயன்பட்டபின், புருவநடுவில் முத்தித் திருவைந் தெழுத்தால் முடிவுப் பொருளாகிய சிவசத்தையே தேனித்து வந் தால், தேனிப்பு மிகுதியால், கடவுளும் உயிரை அணுகி நிலை கொண்டு நிற்பான். உயிரும் பதிஞான உருவாகித் திரண்டு அந் நிலையில் அடிமையாகும்.

இக் கருத்துக்களை இந்த முதற்செய்யுள் விளக்குகிறது.

எட்டு மலர்களென்பது கொல்லாமை, ஐம்பொறியடக்கல், அறிவுடைமை, அன்புடைமை, அருளுடைமை, தவம், வாய்மை, பொறையுடைமை என்பன. குண்டலியில் செய்து - உந்தியில் செய்து; ஓமம் செய்து என்று மாறுக. ஓமம் - ஓம் என்னும் ஞான அனல்; கோதண்டம்-புருவநடு; அதில் தேனித்தலைச் 'சானிக்கில்' என்ருர். சானிப்பது தேனிப்பது; அண்டனும் - உயிரை அண்டுவோனுவான், அணுகுவோனுவான்; இங்கே சேடன் என்றது உயிர். திரண்டவன் என்பது பொருள். பதிஞான

உருவாய்த் திரண்ட உயிர் என்பது கருத்து. தன்னை அண்டி வரும் சிவசத்துக்கு அடியனுவான் என்றபடி. அங்கு—அந் நிலையில்.

வழிபாடு என்றால், அதற்கு ஓமித்தலும் தேனித்தலும் வேண்டும்.

இங்கே இறைவனது உருவ வழிபாடு அகத்திலும் அகவழி பாடாகக் கூறப்பட்டது. கடவுள், உருவத்துக்கு அப்பாற்பட் டவனே; ஆயினும் கருணையால் அருவ அருவுருவ உருவ வடிவுக ளாவான். மூன்றும் வடிவுகளென்றே கூறப்படும். அருவமாய் இருக்கினும் கண்ணுக்குத் தெரியாதே தவிரக் காற்றுப்போல அருவத்துக்கும் ஒரு வரம்புண்டு. அருவுருவம் என்பது உருவம் போன்ற வடிவுகள் இல்லாமல் கண்ணுக்கு மட்டும் தெரியும் சோதி போல்வது. திருக்கோயில் கருவறைகளில் இந்த அருவுருவச் சிவலிங்கச் சோதிகளைக் காணலாம். உருவம் என்பது ஆடும் அம்பலவாணர் சிவகாமி அம்மையார் வடிவம்; அம்மையப்பர் வடிவம்! அருவ அருவுருவ உருவ வடிவுகளாகிய இந்த மூன்றும் திருக்கோயில்களில் இருக்கும். அருவம் என்பதுதான் திருக் கோயிலில் உள்ள நுண் அம்பலமாய்க் (இரகசிய அம்பலம்) காணப் படும்.

'கற்பனை கடந்த சோதி, கருணையே உருவமாகி
அற்புதக் கோலம் நீடி'

என்று சேக்கிழார் இவ் வுண்மைகளை விளக்குவார். கருணையே உருவமாகி என்றது, 'கருணையால் அருவ அருவுருவ உருவம் என்னும் வடிவ வேறுபாடுகளாகி' என்று பொருள் தரும். 'அற்புதக் கோலம் நீடி' என்பது, 'வியக்கத்தக்க அம்பலவாணர் அம்மை கோலம் கொண்டு' என்னும் கருத்தை விளக்கும்.

இதயத்தில் இக் குறியை நிறுத்திப் புருவ நடுவில் தேனித்த லாலும், உச்சிக்குமேல் தேனித்தலாலும் நிட்டை என்னும் நிலைத்த செயல் கூடிவரும். திருவைந்தெழுத்துத் தேனிப்பின் பயனாக இங்ஙனம் பதிஞானம் பெருகி நிலைபெற்று நிட்டையின்பம் உண் டாகிறது.

சிலர் திருவைந்தெழுத்தை 'ஓதும் முறை' என்றும் பயிற்சியில் 'நிற்கும் முறை' என்றும் பிரித்துக் கொள்வதுண்டு. இதனைச் சிவ ஞான முனிவர் உறைப்பாய் மறுக்கிறார். "உணராதார் சாதித்து நிற்கும் முறை வேறே. ஓதும் முறைவேறே எனச் சித்தாந்த வழக் கொடு முரணிக் கூறுவர்" என்பர். திருவைந்தெழுத்துப் பயிற்சி யில் நில்லாமல், வாளா ஓதுதல் பயனற்றது என்பது கருத்து.

நிட்டையில் தேனிக்கத் தேனிக்கப் பதிஞானம் நிறைவு கொண்டு நிலைபெறும். பதிஞானம் என்பதைப் பயிற்சி என்று கொண்டால் அதை நிறைவாக்கும் திருவைந்தெழுத்துத் தேனிப்பைச் 'சிறந்த பயிற்சி' என்று சொல்லலாம். வெறும் பொய்ப் பாவனை ஆகாமல் உண்மையில் உள்ள சிவத்தைத் தேனிக்கும் மெய்ப் பாவனையால் இந் நிட்டை விளங்குதலால், இதனை வெறும் சித்தி போலச் 'சித்த சாதனை'யாக மட்டும் கொள்வது கூடாது.

அகத்திலும் புறத்திலும் முறுகிய உள்ளம் வைத்து வழிபட்டு அன்பு செய்தாலன்றி முதல்வனைச் சார்ந்து சார்ந்ததன் வண்ணமாதல் இயலாது. புறவழிபாட்டினும் இந்த அகவழிபாடுதான் அன்பு செய்வதற்கு ஏற்றது. ஏனென்றால், அன்பை அகம் என்ப; அன்பு வழிபாடு அக வழிபாடு; ஆகவே சித்தாந்தத்தில் கூறும் நிட்டை என்பது 'அன்பினால் நிட்டை'; கற்பனை கடந்த பொருளாயிருக்கும் பெருமானை உணர்வதற்கும் அடைவதற்கும் உருவ வழிபாடு ஒரு வாய்ப்பு!

'முதல்வன் குறைவுடையவனாயிருந்தால் நெஞ்சம் நெகிழ்ந்து அன்பு உண்டாகும்; ஆனால் அவனோ குறைவிலா நிறைவு! நெஞ்சு நெகிழ வாய்ப்பில்லையே' என்றும் தோன்றலாம்; அற்றன்று, அவ்வளவு நிறைவு உடையனாயிருப்பவன், உயிர்களுக்காக இவ்வளவு கருணையும் செயலுங் கொண்டு பாடுபடுகிறானே என்று உணர்வெழுந்தால், யார்க்கும் அன்புருக்கம் உண்டாகும் என்று கொள்ளவேண்டும்; அந்த அன்பில், (அக உருக்கத்தால்) வழிபாடு நிகழ்தல் ஒருதலை;

இரண்டு நலங்கள் இந்த உருவ வழிபாட்டில் அமைகின்றன. ஒன்று, உணரமுடியாத கடவுளை அன்பினால் தேனித்து உணரவும் சாரவும் வழி கோலுகிறது; இரண்டு, உயிரும் பதிஞான உருக் கொண்டு நிறைவாகிக் கடவுளுக்கு ஆளாகிறது. இவ் விரண்டுக்கும் இரண்டு அடிகள் இயற்றி, உவமைகள் கூறிக்கொண்டு, ஒரு விளக்கச் செய்யுள் வருகிறது.

**இரண்டாம் செய்யுள் :**

> *"இந்துவில் பானுவில் இராகுவைக் கண்டாங்குச்*
> *சிந்தையிற் காணிற் சிவன்கண்ணாம் ;—உந்தவே*
> *காட்டாக்கில் தோன்றிக் கனல்சேர் இரும்பென்ன*
> *ஆள்தான் ஆம் ஓதஞ் செழுத்து."*

வானத்தில் இராகு கேதுக்கள் உண்டு; இவை தெரிவதில்லை. நிலாவிலும் ஞாயிற்றிலும் பற்றும்போது மட்டும் தெரி

கின்றன; அதுபோலப், பதிஞான ஆன்மாவில் இறைவன் அகப் படுவான்; மறைந்திருக்கும் அவனைக் காணவேண்டுமானால், இப்படி அடியார்களைத் தாவுவதன் மூலமாகத்தான் தெரிந்து கொள்ளவேண்டும். அதாவது, ஞான உயிரின் வணக்கத்தைக் கொண்டு, இறைவன் இருப்பையும் ஆற்றலையும் அறியவேண்டி யிருக்கின்றது என்பது கருத்து; அதற்காக இந்த உவமை வந்தது.

அடுத்த அடியில் வரும் உவமைகளில் ஒன்று, விறகில் தீ; தீ அதனில் மறைந்திருக்கிறது. கடைந்தால், வெளிப்படும்; அதைப்போல, உயிரில் இறைவன் மறைந்திருக்கிறான்; தேனித் தால், வெளிப்படுவான்; இதற்காக இவ் வுவமை!

இரும்பிலும் கனல் சேர்ந்திருக்கிறது. தீ வெளிப்பட்டால் தீ வடிவு ஆகிறது. அவைபோல, ஆன்மாவும் பதிஞானக் கனல் உருவமாய் விளங்குகிறது. அசத்தை மீண்டும் நாடுதலின்றிப், பதிஞானக் கனலுருவாகிச் சத்தையே ஆன்மா உணரும், 'அடிமை யாகும்' என்பதற்கு அது பொருள்; அடிமையாவது, அதன் வழிப் படுவது. விறகு சாம்பலாகி அழியும்; இரும்பு தீ வழிப்பட்டாலும் அழியாமல் நிற்கும்; சிவத் தன்மை முற்றிச் சிவமாகியும், சிவத்துக்கு உயிர் வேறாகி அழியாமல் நிற்கும். சிவ வடிவாகி அதன் வயமாய் அடிமையென நிற்கும் என்பதற்கு இது, உவமை! இவையெல்லாம் இச் செய்யுளில் வருகின்றன.

'திருவைந்தெழுத்துத் தேனிப்பிற் கண்டால்' என்னும் பொருட்டுச் 'சிந்தையிற் காணில்' என்றார். அறிவுக்கறிவாய் விளங்கி நிற்பன என்னுங் கருத்தில் 'கண்ணும்' என்றார். காட்டம்—விறகு; அதிலுள்ள அக்கினியைக் காட்டாக்கி என்றார். அக்கினியை 'அக்கி' என்பதும் உண்டு. விறகில் மறைந்திருக்கும் தீ, உண்டாவது போலக், கடையும் போது உயிருள் மறைந் திருக்கும் இறைவன் தேனிப்பில் தோன்றுகிறான். கனல் சேர்ந்த இரும்பு கனல் என்றே கூறப்படும்; இரும்பென்று சொல்லுவதில்லை. இரும்பில் கனல் அப்படி அடர்ந்துகொண்டு மேலிட்டிருக்கிறது. உயிரின் இயற்கை யுணர்வில் சிவஞானக் கனல் அப்படித்தான் அடர்ந்துகொண்டு முறுகி மேலிடுதலால், சிவம் என்னும் பெய ரையே உயிர் கொள்ளும். மெய்கண்ட சிவம், அருணந்தி சிவம், மறைஞான சிவம், உமாபதி சிவம் என்பன போல; ஆயினும், உயிர்கள் அடிமையாகவே இருக்கும்; இரும்பு அனல் வழிப்பட்டும், இரும்பாகவும் எஞ்சி நிற்றல்போல என்பது, கருத்து.

திருவைந்தெழுத்தின் தேனிப்பால் இங்ஙனமெல்லாம் உயிர் சிவஞான நிறைவுக் கனலை எய்திச் சுடர்விடுமாதலால் 'அஞ்செழுத்து' என்று செய்யுளில் வந்தது. பூசை, ஓமம், தேனிப்பு என்னும் இதுவரையில் நுட்பத் திருவைந்தெழுத்து உதவும்; அதற்குமேல் தேனிப்புக்கு மிகு நுட்பத் திருவைந்தெழுத்து உதவும். பூசையால் உயிர் மின்னுருக்கொள்ளும்; ஓமத்தால், முத்தி வேள்வி யொளியாகிய மின்காந்த உருக்கொள்ளும்; இது, சூரிய ஒளி; தேனிப்பால் உச்சி வரையில் மின்அமிழ்த உருக்கொள்ளும்; இது நிலவு ஒளி; இம் மூவொளிகளும் பொதுவாக மின் உருவமே! அதாவது, அன்புருவமே; அதற்குமேல் அருளுருவம்; பின்பு இன்புருவம்.

திருவைந்தெழுத்து முறையில் தேனிப்பதன் விளக்கத்துக்கு இதய வழிபாடு (அக வழிபாடு) இன்றியமையாதது என்பதை விளக்கிக் கொண்டு மூன்றும் செய்யுள் வருகிறது.

**மூன்றும் செய்யுள் :**

> ***"மண்முதல் காளம்; மலர்வித்தை; கலாருபம்***
> ***எண்ணிய ஈசர் சதாசிவமும்;—நண்ணிற்***
> ***கலையுருவாம் நாதமாம் சத்தியதன் கண்ணும்;***
> ***விலையதில் ஆம் அச்சிவன்தாள் நேர்."***

அக வழிபாட்டுக்கு இடம் இதயம் என்று முன்பு பார்த்தோம். வழிபாட்டிடமாகக் கொள்ளும் இதயம், நமது மூல உடம்பில் (காரண உடம்பில்) உள்ளது. உயிர் அவத்தைகள் உறுவது, தூல உடம்பு நுண்ணுடம்பு மூல உடம்பு என்னும் மூன்றிலும் ஆகும். தூல உடம்பின் அவத்தை 'சகலம்' எனப்படும். நுண்ணுடம்பின் அவத்தை 'சொப்பனம்' எனப்படும். மூல உடம்பின் அவத்தை 'சுழுனை' எனப்படும். இவற்றைக் கடந்து இடங்கொள்வதுதான் துரியம் துரியாதீதம் என்பன. ஐந்து அவத்தைகளுக்கும் ஐந்து உடம்புகள் கூறுவதுண்டு. அப்படி நான்காவதும் ஐந்தாவதுமாகக் கூறும் உடம்புகளும் காரண உடம்பும் நமக்குத் தெரியாதவை. ஆதலின் காரண உடம்பாகிய மூல உடம்பிலேயே மற்ற இரண்டுடம்புகளும் அடக்கிக் கூறப்படும். அன்னமய கோசம் என்பது தூல உடம்பு. கோசம் மனோமய கோசம் என்பவைதான் நுண்ணுடம்பு. விஞ்ஞானமய கோசம் என்பது சுழுனை, அல்லது மூல உடம்பு; பிராணமய கோசத்தின் சிறப்பு என்பது துரியத்தில் விளங்கும்; ஆனந்தமய கோசம் துரியாதீதம் !

சுழுனை என்னும் காரண உடம்பு தேனிப்புக்குரியது. தூல உடம்பையும் நுண்ணுடம்பையும் பற்றியே காரண உடம்பும் இருக்குமாதலால், 'இதயம்' என்பது இம் மூன்றுடம்புக்கும் பொது வாயினும், காரண உடம்பில் வழிபாட்டுக்குச் சிறப்புடையதா கின்றது. சுழுனை சிறக்கும் இடம் காரண உடம்பாகும். இதயம் என்பது அவ் வுடம்பின் நடு.

இதயம் நடுவாதலால், அதனை முக்கிய இடமென்றே கொள்ள லாம். தூல உடம்பிலும் அது நடுவாகவே அமையும்.

இருக்கைகளில் மலர் இருக்கை சிறப்புடையது. இன்ன மலரென்று கூருமல் தனியாக 'மலர்' என்று மட்டுங் கூறினுல் அது தாமரை மலரைக் குறிக்கும். உலகின் புறத்தும் அகத்தும் விளங்கும் முப்பத்தாறு தத்துவங்களும் ஆண்டவனுக்கே மலர் இருக்கையாக இருக்கின்றன. அதனுல் அவன் மலர்மிசை ஏகினுன்.

மண்முதல் இருபத்து நான்கு கருவிகள், உந்தியினின்றும் தோன்றுகின்ற தண்டு; அசுத்த தத்துவங்கள் ஏழும் சுத்த தத்து வத்தில் சுத்த வித்தை என்னும் ஒன்றும் ஆக எட்டுக் கருவிகளும் அந்த மலருக்கு எட்டு இதழ்கள்; ஈசுரம் சதாசிவம் என்னும் இரண்டு தூய கருவிகள் அந்த மலர்க்குப் பூந்தாள்கள்; விந்து என்னும் கருவியாகிய சத்தி தத்துவம், அப் பூந்தாள்களின் உள்ளே உள்ள பொகுட்டு; நாதம் என்னும் கருவியாகிய (சிவ தத்துவம்) அப் பொகுட்டிற் காணப்படும் மறை எழுத்துக்கள் என்னும் விதைகள்!

இப்படி முப்பத்தாறு தத்துவங்களையும் மூல (காரண) உடம் பின் இதயத் தாமரையாகக் கொண்டு அன்பர்கள் வழிபாடு நிகழும். இவ்விதயம், நெற்றிக் கண்ணுக்குமேல் உச்சித் தாமரையின்கீழ் உள்ளது; தாமரையின் நுனி வளைந்திருக்கும்; நுண்ணுடம்பின் இதயம் நெற்றிக்கண்ணுக்கு அடுத்ததாய் இருக்கிறது; தூல உடம் பின் இதயம், நெற்றிக் கண்ணுக்குக் கீழே, மார்பில் உள்ளது. தூல உடம்பின் இதயம் யோக நிலைக்கும், நுண்ணுடம்பின் இதயம் பதிஞானத் தொடக்கத்துக்கும், மூல உடம்பின் இதயம் அப் பதி ஞான நிறைவுக்கும் உரியவை. இச் செய்யுளில் வந்தது, மூல உடம்பின் இதயம்!

செய்யுளில் வித்தை என்பது, இரட்டுற மொழிதலால் வித்தை தத்துவங்களையும் சுத்த தத்துவத்தின் 'சுத்த வித்தையை'யும் குறிக்கும். நண்ணில் - ஆராய்ந்தால்; கலையுருவம் - பொகுட்டுரு

வம்; கலையுருவம் சத்தி எனவும் நாதம் அதன் கண்ணும் எனவும் மாற்றிக் கொள்க. நாதமாம் - நாதமாகிய சிவதத்துவமாம்; அதில்- அத் தாமரை இருக்கையில்; நேர் - பற்றிக் கொள்.

உந்தியிலிருந்து தாமரை எழுந்து உச்சி வரையில் வளர்ந்து வளைவாய்க் கீழ் நோக்கி நிற்க, அதில் இறைவனது ஆற்றல் விதைகளாய் அதாவது மந்திரங்களாய், முதலில் நிலைகொள்ளுகின் றன. அம் மந்திரங்களால் ஓம் என்பதன் விரிவான திருவைந் தெழுத்துக்களால் 'ஓம்' என்பதுஞ் சேர்த்து வழிபட்டு அதன் இயல்பை உயிர் அடையலாம் என்று ஆசிரியர் தெரிவித்தார்;

முப்பத்தாறு தத்துவங்களையும் உயிர் தனித்தனியே கண்டு கடந்து அன்புருவாகி அருளொடு சேர்ந்து இன்புருவாகும் வகைக்கு, இச் செய்யுள், தத்துவங்களை மலர் இருக்கையாக எண் ணிக் கூறியது. கடைசியாக மந்திர ஒலிகளில் இறைவனை உணரு முறையும், சிவதத்துவமாகிய நாத தத்துவத்தை விதைகளென்று வகுத்தமையால் தெரிகின்றது;

விதைகள் ஆற்றலுள்ளவை; மந்திர ஒலிகளும் அத்தகையன; செம்மையாகிய சிவபதமுளை மறைஒலி விதைகளிலிருந்து விளைகின் றன. மிகு நுட்பமான மந்திர ஒலிகளில் சிவம் இணக்கங்கொண்டு வெளிப்படுதலால், மந்திரவொலிகளின் முதன்மை தெளியப் படும். பொதுமறை திருமுறை ஒலிகள் இத்தகைய நிறைவான மறைமொழிகளே ! திருவைந்தெழுத்து மந்திரம், இம் மறைமொழி களின் நுட்பம் ! திருவைந்தெழுத்து மந்திரவொலிகளால் வழிபாடு செய்வது இவ்வாற்றால், மிகச் சிறப்பாய் முடிகிறது; திருவைந் தெழுத்துத் தண்ணிழலாகவே உதவுகிறது !

ஒன்பதாம் நூற்பா முற்றிற்று.

குறிப்பு : இதனை யடுத்து இடம்பெற வேண்டிய பத்தாம் நூற்பா முன்னமே (சிலம்பு 53, பரல் 3) வெளியிடப்பட்டுவிட்டமையால் அடுத்த இதழில் பதினோராம் நூற்பா தொடங்கும்.

# தொல்காப்பியம்

# எதிர்மறை முகத்தான் ஏற்றம்

["கவிஞர்கோ' கோவை. இளஞ்சேரனூர்]

(செல்வி பரல் ௩, ௧௩௨ ஆம் பக்கத் தொடர்ச்சி)

... ... ... ... என்றே
பொருள்நயந் தோன்றப் புகன்றாள்.—மருளாத
கண்ணப்பன் "ஏதேது கண்ணம்மா, உன்போக்கில்
பண்ணற்கு விட்டிட்டால் காப்பியனார்—துன்னும்
இலக்கணச் சான்றோன் அலனெனப் பாங்காய்க்
கலக்கமே யின்றிக் கழறிக்—கலக்குவையே"
என்றவன் சொற்போல் இளங்கொடி சொல்லுவாள்:

"ஒன்றிய தொல்காப் பியனை நான்—என்றும்
இலக்கணச் சான்றோன் எனவொன் றியம்பேன்.
முழக்கிய தொல்காப் பியத்தில்—விளக்கும்
இயலெலாம் கண்டிடின், நூன்மரபு தன்னால்
முயலும் நெடுங்கணக்கு முன்னோன்;—அயலாம்
பிறப்பியல் தன்னால் உடற்கூ றறிஞன்;
சிறக்கும் புணரியல் தன்னால்—திறக்கும்
இசைப்பியற் சான்றோன்; கிளவியாக் கத்தால்
வசையில் மொழிசூழ் அறிஞன்;—இசையும்
விளிமரபு தன்னால் விளித்தே உறவின்
வழிமரபு கொள்ளும் வளத்தன்—விழியாம்
களவியல் கற்பியலால் பாவியல் ஆய்ந்தோன்;
அளவின் புறத்திணை யார்ப்போர்த்—தலைவனும்;
மெய்ப்பாட் டியலால் உளவியல் வல்லுநன்;
செய்யு ளியலால் ஒலியியல்—ஐயன்;
மரபியல் தன்னால் உலக வழக்கின்
உரமறி சான்றோன் எனவே—விரவிடும்
பல்கலைச் சான்றோனைப் பார்த்தும் இலக்கணச்
செல்வன் எனமட்டும் சொல்வதோ ?—சொல்"என,

"புதிர்களை வைத்தே புகழ்க்காப் பியற்கே
எதிர்மறை வாயிலாய் ஏற்றம்—கதிர்போல்
உரைத்தாய் மகிழ்ந்தேன்; உணர்ச்சியால் உந்தும்
வரைத்தாழ் அருவிபோல் வாய்ந்தே—நிறைத்திடும்
ஒல்கா உணர்வோ டுலகெலாம் செய்குவம்
தொல்காப் பியத்திற்குத் தொண்டு."

# தமிழ் நெடுங்கணக்கு

## [ஞா. தேவநேயன்]

**கவனிப்பு:** நான் கடந்த அரை நூற்றாண்டாகச் செய்து வந்த சொல்லாராய்ச்சி மொழியாராய்ச்சியின் பயனாகக் கண்ட உண்மைகளையும் கொண்ட முடிபுகளையும், நூலாக உருவாக்குமுன் பல கட்டுரைத் தொடர்களாக வெளியிடக்கருதிச் 'செந்தமிழ்ச் செல்'விக்கு விடுத்து வந்தேன். அவற்றுள் இறுதியாக வெளி வந்த தொடர், "தமிழின் தலைமையை நாட்டும் தனிச்சொற்கள்" என்பது. அது ஐம்பது கட்டுரை கொண்டது. அவற்றுள் பதினான்கு மட்டும் வெளிவந்துள்ளன.

இன்று திடுமென எதிர்பாராத ஒரு நிலைமை நேர்ந்து, 'ஐ ஔ' 'அய் அவ்' தானா? என்றும், தமிழுக்கு எழுத்து மாற்றம் இன்றியமையாததா வென்றும், பலர் நேரிலும் எழுத்து வாயிலாக வும் மேன்மேலும் வினவி வருவதால், அவரனைவர்க்கும் விடை யிறுக்கு முகமாக, (1) தமிழ் நெடுங்கணக்கு, (2) 'ஐ ஔ' 'அய் அவ்' தானா?, (3) எகர ஒகர இயற்கை, (4) உயிர்மெய்க் குறிகளின் ஓரியலின்மை, (5) அறியாமை யகற்றல், (6) பகுத்தறிவின் பயன் என்னும் அறு தலைப்புக் கட்டுரைகளை இன்று ஒவ்வொன்றாகச் செல்வியில் வெளியிடத் துணிந்தேன்.

தமிழ்நா டெங்கணுமுள்ள புலவர் கல்லூரி ஆசிரியரும் மாணவரும் ஊன்றிக் கவனிக்க.

தமிழ்ப் பற்றாளர் ஆயிரக் கணக்காக அச்சிட்டுப் படிக்கத் தெரிந்த தமிழர் அனைவர்க்கும் ஆங்காங்கு வழங்குக.

'செந்தமிழ்ச் செல்வி' வாங்காத கல்வி நிலையங்களிலும் நூலகங்களிலும், ஆண்டுக் கையொப்பங் கட்டி ஒரு படியேனும் ஒழுங்கராக வருவிக்குமாறு, பொறுப்புள்ள தமிழ்ப் புலவரும் தமிழ்ப் பற்றாளரும் முயற்சி மேற்கொள்க.

தமிழ் உலக முதல் உயர்தனிச் செம்மொழி. இவ் வுண்மையை முன்னமே ஒரு பழம்பெரும் புலவர் கண்டு,

> *"ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி*
> *ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும்—ஆங்கவற்றுள்*
> *மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது*
> *தன்னே ரிலாத தமிழ்"*

என்று தெள்ளத் தெளிவாகப் பாடிவைத்திருக்கின்றார். இது உண்மை நவிற்சியே யன்றி உயர்வு நவிற்சியன்று.

குமரிமுனைக்குத் தெற்கே மடகாசுக்கர்த் தீவுவரை பரவியிருந்த பழம்பாண்டி நாடான குமரிக்கண்டம் முழுதும் மூவேறு கடல்கோள் களால் முழுகிப் போனமையாலும், முதலிரு கழகப் பல்துறை யிலக்கிய விலக்கணப் புலவிய மனைத்தும் இயற்கையாலுஞ் செயற் கையாலும் அழியுண்டமையாலும், தமிழின் தொன்மையை ஆழ்ந்த மொழியாராய்ச்சியின்றி அறிய வியலாவாறு, மொழியொழிந்த பிற சான்றுகளெல்லாம் முற்றும் இறந்துபட்டன என்பதை, இற்றைத் தமிழ்ப் புலவர் முதற்கண் அறிதல் வேண்டும். ஆகவே, தொல் பொருட்கலை (Archaeology), ஆரியர் வருகைக்கு முற்பட்ட பழந் தமிழக வரலாற்றிற்குப் பயன்படாதென்பதை, தமிழ்நாட்டு வரலாற்றுத் துறைத் தலைவரும் கல்வெட்டுத் துறைத் தலைவரும் தொல் பொருளாராய்ச்சித் துறைத் தலைவரும் அறிதல் வேண்டும்.

தமிழ் தென்னாட்டு மொழியா நண்ணிலக் கடற்கரை மொழியா என்றும், குமரிநில மொழியா இற்றைநில மொழியா என்றும், திரவிட மொழிகட்குத் தாயா உடன்பிறப்பா என்றும், ஆரிய மொழிக் குடும்பத்திற்கு மூலமாக வுள்ளதா இல்லதா என்றும், தமிழன் பிறந்தகமும் மாந்தன் பிறந்தகமும் ஒன்ரு வேரு என்றும், மொழி நூல் வரலாறு மாந்தநூல் ஆகிய முத்துறையிலும், நடுநிலையுடனும் பொறுமையுடனும் நீண்டகால ஆராய்ச்சி செய்தாலன்றி, தமிழின் தொன்மை முன்மை தாய்மை தலைமை முதலிய தன்மைகளை முற்றும் அறியமுடியாது.

தொல்காப்பியம், முதலிரு கழகமும் இருந்த பழம் பாண்டிநாடு முழுதும் முழுகிய பின்பும், ஆரியப் பூசாரியர் தென்னாடு வந்து ஆரியச் சொற்களும் கருத்துக்களும் தமிழிலக்கியத்திற் புகத் தொடங்கிய பின்பும், வைகை மதுரையும் கடைக்கழகமும் தோன்று முன் கி. மு. 6ஆம் அல்லது 7ஆம் நூற்ருண்டில், பாண்டியன் வயப்பட்ட தென் சேர நாட்டில் தோன்றிய பன்மாண் சார்பிற் சார்பான தொகுப்பு நூலாதலின், அதனையே முதனூலாகக் கொண்டு அது தோன்றிய காலமே தமிழிலக்கியப் பொற்கால மென்று கூறுவது, ஒரு பெருங்கோவிலின் திருவுண்ணாழிகையையும் இடை மண்டபத்தையும் முகமண்டபத்தையும் பாராது, கொடிக் கம்பத்தடியிலுள்ள சிற்றுருவத்தையே கோயிற்படிமையாகக் கருதித் தொழுவது போன்றதே.

> "செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு
> முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
> புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்"

என்று பனம்பாரனார் கூறியதும்;

"எழுத்தெனப் படுப.........மூப்பஃ தென்ப"

என்று எழுத்ததிகாரத் தொடக்கத்திலும்,

"உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே"

என்று சொல்லதிகாரத் தொடக்கத்திலும்,

"கைக்கிளை முதலா.........எழுதிணை யென்ப"

"அகத்திணை மருங்கின் அரில்தப வுணர்ந்தோர்.........
திறப்படக் கிளப்பின்"

"நல்லிசைப் புலவர் செய்யு ளுறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே."

"மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பின்"

என்று முறையே பொருளதிகார அகத்திணையியல் புறத்திணையியல் செய்யுளியல் மரபியல் தொடக்கத்திலும், கூறியதோடு, நூல் நெடுகலும் "என்மனார் புலவர்", "எனமொழிப", "வரையார்", "என்ப உணருமோரே", "என்ப சிறந்திசினோரே", "என்மனார் புலமை யோரே", "எனமொழிப உணர்ந்திசினோரே", "கிளப்ப", "என்றிசினோரே" என்றும் பிறவாறும் அடிக்கடி இடையிடை தொல்காப்பியர் கூறிச் செல்வதும்; தொல்காப்பியம் தொகுப்பு நூலேயன்றிப் புதிய வகுப்பு நூலன்று என்பதைத் தெளிவாகக் காட்டும்.

மேலும், தொல்காப்பியம் நன்னூலும் அஷ்டாத்யாயீ என்னும் பாணினீயமும் போல எழுத்துஞ் சொல்லும் மட்டுங் கூறாது, தமிழுக்கே சிறப்பாகவுள்ள யாப்பணி யுட்கொண்ட தொல்வரவுப் பொருளிலக்கணமுங் கூறுதலின், அதனாலும் அது தொல்காப்பியர் புதுப்படைப்பன்றென்பது வெள்ளிடை மலையாம். வடசொற் கலப்பும் சில ஆரியக் கொள்கைகளும் பற்றிய கூற்றுக்களே தொல் காப்பியரின் புதுச் சேர்க்கையாகும். இதை யறியாத சில தமிழா சிரியர், தொல்காப்பியர் தாமே தமிழ் எழுத்திலக்கணத்தைத் திறம்பட வகுத்துக் கூறியதாக அவரைப் போற்றியுரைத்துத் தம் ஆராய்ச்சி யின்மையைப் புலப்படுத்துவர்.

பொருளிலக்கணமரபு குமரிநிலத் தமிழரின் திணைநிலை வாழ்க்கைச் செய்திகளைப் போற்றிக் காத்துவருவதால், அவ் வகை யிலேயே தொல்காப்பியம் பழந்தமிழ் வரலாற்றுராய்ச்சிக்குப் பயன் படுவதாகின்றது. இங்ஙனமே, புறநானூறு, கலித்தொகை, சிலப்பதிகாரம், மணிமேகலை, புறப்பொருள் வெண்பாமாலை முதலிய

சில பாத்தொகைகளிலும் வனப்புக்களிலும் இலக்கண நூல்களிலும் உள்ள குறிப்புக்களும் பயன்படுகின்றன.

ஆராய்ச்சி யென்பது எல்லாருஞ் செய்யக்கூடிய எளிசெய லன்று. மதிநுட்பம், பரந்தகல்வி, நடுநிலை, அஞ்சாமை, தன்னல மின்மை, மெய்யறி யவா என்னும் ஆறும் ஆராய்ச்சியாளர்க்கு இன்றிமையாத பண்புகளாகும்.

உலகத்திலுள்ள மூவாயிரம் போன்ற மொழிகளுள், தமிழைப் போன்று அடிமுதல் முடிவரை தருக்கப் பொருளாக விருப்பது வேறொன்றுமில்லை. பண்டை ஆரியப் பூசாரியர், தம் போன்றே தம் வழியினரும் காலமெல்லாம் தமிழரை அடிப்படுத்தி மேனத்தாக வாழ்தற் பொருட்டு, தம்மை நிலத் தேவரென்றும் தமிழ் வழிப்பட்ட தம் இலக்கிய மொழியைத் தேவமொழியென்றும் கூறி மூவேந்தரை யும் ஏமாற்றி, தமிழரே தம் இனத்தைப் பகைக்கவும் தம் மொழி யைப் புறக்கணிக்கவும் குமுகாயத் துறையிலும் இலக்கியத் துறை யிலும் வழிவகுத்துவைத்திருக்கின்றனர். காலப்போக்கில் பிராமணர் இதன் புரைமை கண்டு திருந்த நேரினும், காட்டிக் கொடுக்குந் தன்னலக்காரரான வையாபுரிகள் அதைத் தடுப்பதிற் கண்ணுங் கருத்துமாய் இருந்து வருகின்றனர். எல்லா நாட்டிலும் காட்டிக் கொடுப்பார் இருக்கவே யிருக்கின்றனர். ஆயினும், வெற்றித் தொகையினர் தமிழ் நாட்டிலேயே உள்ளனர்.

ஓர் எழுத்தைக் குறித்தால் ஒலியிலும் வரியிலும் அது வட வெழுத்து; ஒரு சொல்லைச் சொன்னால் அது வடசொல்; ஒரு மண்டிலத்தை யாத்தால் அது வடமொழி யாப்பு (விருத்தம்); ஒரு நூலைப் போற்றினால் அது வடநூலின் வழிநூல்; ஒரு புலவரைப் பாராட்டினால் அவர் பிராமணருக்குப் பிறந்தவர்; ஒரு தெய்வத்தைத் தமிழ்த் தெய்வ மென்றால் அது ஆரியத்தெய்வம்; ஒருவன் தன் முன்னோர் தெய்வத்தை வழிபடச் சென்றால், அவன் எட்டத்தில் நிற்க இன்னொருவனே அவனுக்காக விளங்காத அயன்மொழியில் வழிபடவேண்டும்; ஒருவன் தன் தாய் நாட்டைத் தன்னுடைதென்றால், அவனும் பிறனைப்போல் வெளிநாட்டினின்று வந்தேறியே என்பது பல்கலைக்கழக வெளியீடு. இங்ஙனம் எனைதயெடுத்தாலும் தமிழ னுக்கு உரிமையில்லாவாறு வரலாறு திரித்தெழுதப்பட்டுள்ளது.

கடந்த மூவாயிரம் ஆண்டாக அடிமைத்தனத்திற் பிறந்து வளர்ந்து வந்திருப்பதனால், அறிவாராய்ச்சியும் உரிமையுணர்ச்சியும் விடுதலைப்பேறும் மிக்க இவ் விருபதாம் நூற்றாண்டிலும், தமிழினத் தில் தலைமையான வகுப்பானும் அயலானைத் தன் இல்லத்தில் உண்பிக்கும் துப்புரவும் உயர்வும் தனக்கில்லையென்று நம்பித்

தன்னைத் தானே தாழ்த்திக் கொண்டிருக்கின்றான். இவ் வேற்றத் தாழ்வு வெளிப்படையாகவும் தகுதியுடையது போன்றும் இருப்ப தால், தமிழை மீண்டும் அரியணையேற்றும் தமிழாராய்ச்சியாளனுக்கு நெஞ்சுரத்தின் தேவை பன்மடங்கு மிகுகின்றது.

தமிழ் உலக முதல் உயர்தனிச் செம்மொழியாயினும், ஆரியத் தாற் கட்டுப்பாடாகவும் வெற்றித் திறமாகவும் மறைக்கப்பட்டு வரு வதனாலும், தமிழ் ஆசியாவின் தென்கோடியில் வழங்குவதனாலும், தமிழர் எல்லா வகையிலும் ஆரியத்திற்கு அடிமைப்பட்டிருப்பத னாலும், இதுவரை தமிழின் பெருமையைத் தமிழர் வெளியுலகத் திற்குப் போதிய அளவு எடுத்துக்காட்டாமையாலும், உட்பகைவ ரான வையாபுரிகளின் கையே இன்றும் ஓங்கியிருப்பதனாலும், மேலையர் என்னும் ஐரோப்பியர் கீழைநாட்டு நாகரிகத்தை ஆரிய அடிப்படையிலேயே ஆய்ந்து வருவதனாலும், பண்டை எகிபதிய நாகரிகமும் சுமேரிய நாகரிகமும் அவருக்கு அண்மை நாடுகளில் தோன்றி வளர்ந்திருந்தமையாலும், அவ்விரு நாகரிகத்தையே உலக முதுநாகரிகமாகக் கொண்டு அவற்றை ஆராய்வதிலேயே பெருங் கவனத்தைச் செலுத்தி வந்திருக்கின்றனர்.

## பிறமொழி யெழுத்துக்கள்

எகிபதிய சுமேரிய நாகரிகத் தோற்றம் கி. மு. 3000 ஆண்டு கட்கு முற்பட்டது. எகிபதிய எழுத்து முதற்கண் படவெழுத்து (pictograph); பின்னர்க் கருத்தெழுத்து (Ideograph or logo graph).

சுமேரிய நாகரிக வழிப்பட்ட சேமிய வெழுத்து முதற்கண் அசையெழுத்து (Syllabury கி. மு. 2000); பின்னர் ஒலியெழுத்து (Alphabet கி. மு. 1500).

கிரேக்கர் சேமிய ஒலியெழுத்தைப் பினீசிய (Phoenician) வணிகர் வாயிலாகக் கற்றுத் தமக்கேற்றவாறு திருத்திக் கொண்ட தாகச் சொல்லப்படுகின்றது. கிரேக்க எழுத்தினின்று இலத்தீன் எழுத்தும், இலத்தீன் எழுத்தினின்று ஆங்கிலம் முதலிய பிற ஐரோப்பிய மொழி யெழுத்துக்களும் அமைந்துள்ளன.

கிரேக்க எழுத்துக்கள் அல்பா (Alpha), பேற்றா (Beta) என்று தொடங்குவதால், அவ் வண்ண மாலை 'அல்பாபேற்று' (Alphabet) எனப் பெயர் பெற்றது. இது தமிழில் உலகவழக்கில் 'அ அன்ன ஆவன்னா' (அ ஆ, அவ்வா) என்று வழங்குவது போன்றது.

கிரேக்க வண்ணமாலை முதற்கண்

A, (Short and long) B, G, D, E (Short), W, Z, E (long). TH, I (short and long), K, L, M, N, X, O (short), P, R, S, T, U (short and long), PH, KH, PS, O (long) என்னும் 25 எழுத்துக்களைக் கொண்டிருந்தது. பின்னர், திகம்மா (Digamma) என்னும் W நீக்கப்பட்டுவிட்டது.

இலத்தீன் வண்ணமாலை, முதற்கண்

a, b, c, d, e, f, g, h, i, k, l, m, n, o, p, q, r, s, t, u, x என்னும் 21 எழுத்துக்களையே கொண்டிருந்தது. பின்னர் j, v, y, z என்னும் 4 எழுத்துக்கள் சேர்க்கப்பட்டன.

கிரேக்க எழுத்துக்களுட் பலவற்றின் வடிவம் வேறு. அவற்றை இங்குக் காட்டலாகாமையால் ஆங்கில வடிவிற் குறிக்கப் பட்டுள்ளன.

சீன எழுத்து கி. மு. 1000 ஆண்டுகட்கு முற்பட்டது. அது 4000 கருத்தெழுத்துக்களைக் கொண்டது.

சப்பானியர் கி பி. 5 ஆம் 6 ஆம் நூற்றாண்டுகளில் சீனக் கருத்தெழுத்துக்களைக் கடன் கொண்டனர். அவை ஐயாயிரமாகப் பெருகி ஈராயிரமாகக் குறைக்கப்பட்டுள்ளன. சொற்களின் முதனிலைகளைக் குறிக்கக் கருத்தெழுத்துக்களும், ஈறுகளைக் குறிக்க 'இரகன' (Hiragana), 'கற்றகன' (Katakana) என்னும் இருவகை அசையெழுத்துக்களும் கையாளப்படுகின்றன வென்றும், இதனால் சப்பானிய மாணவன் 1500 சீனக் கருத்தெழுத்துக்களையும் (ஏறத்தாழ 100) இருவகை அசையெழுத்துக்களையும் கற்க வேண்டியுள்ள தென்றும், பாட்மேர் (Bodmer) கூறுகின்றார். (The Loom of Language, p. 438).

அரபி யிலக்கியம் கி. பி. 6 ஆம் நூற்றாண்டில் தொடங்கிற்று. அதன் எழுத்தும் அக் காலத்ததே. அது 28 எழுத்துக்களைக் கொண்டது. அவற்றுள் ஒன்று அ (Fatha), இ (Kabra), உ (Damma) என்னும் முக்குறிற்கும் பொதுவான குறி. வகர வெழுத்து உகரத்தையும் யகரவெழுத்து இகரத்தையும் இடத்திற் கேற்ப உணர்த்தும். இருவேறு குறிகள் சேர்ந்து ஆ, ஈ, ஊ என்னும் நெடில்களைக் குறிக்கும். சில இணைப் பெழுத்துக்களும் (Ligatures) உண்டு.

அரபிக்கு இனமான எபிரேய இலக்கியம் கி. மு. 12 ஆம் நூற்றாண்டில் தோன்றியது. அது 22 எழுத்துக்களைக் கொண்டது. உயிரொலிகளை யுணர்த்தும் முறையில் அது அரபியொத்ததே. அவ்

விரு மொழிகளின் வண்ணமாலைகளும் வெவ்வேறு வடிவுகொண் டனவேனும், கிரேக்கத்தைப் போன்று தானுனிய மூலப் பினீசிய வண்ணமாலையினின்று திரிந்தவையே.

### தமிழின் தொன்மை

கி. மு. 2000 ஆண்டுகட்கு முற்பட்ட ஊர் என்னும் பாபி லோனிய நகரகழ்வில், கி. மு. 3000 ஆண்டுகட்குமுன் சேரநாட்டி னின்று ஏற்றுமதி செய்யப்பட்ட தேக்குமர உத்தரம் கண்டெடுக்கப் பட்டுள்ளது. ஊர் என்பது நகர் என்று பொருள்படும் அக்கேடியச் (Akkadian) சொல். அதுவே பண்டைத் தமிழகத்தில் மருதநில நகரைக் குறித்த பொதுச்சொல்.

அப் பாபிலோனிய நகரிற் பிறந்து வளர்ந்த ஆபிரகாமின் பெயர், அப்பன் என்னும் தமிழ்ச் சொல்லின் சிதைவான ஆப் என் பதை நிலைச் சொல்லாகக் கொண்டது. அவனே அரபியர்க்கும் இசரவேலர்க்கும் பொதுவான முன்னோன். அவன் காலத்தில் அவ் வீரினத்தாரும் தோன்றவே யில்லை. ஆகவே, அரபியும் எபிரேயமு மான அவர் மொழிகளுந் தோன்றவில்லை. ஆபிரகாம் பேசின மொழி அக்கேடியன்.

### தமிழர் தோற்றமும் பரவலும்

குமரிநாட்டு மக்கள் தமிழின் வெவ்வேறு நிலையில் வெவ்வேறு திசை சென்று பரவியுள்ளனர். தமிழின் முச்சுட்டுக்களினின்று தோன்றிய மூவிடப் பெயர்கள் ஒரு காலத்தில் குமரிநாட்டு மக்களொடு ஆத்திரேலியர்க்கும் சீனருக்கும் இருந்த உறவைக் காட்டுகின்றன. கால்டுவெல் திரவிட ஒப்பியல் இலக்கணம் (சென்னைப் பதிப்பு) 361 ஆம் பக்கம் பார்க்க.

எ - டு:

| தமிழ் | ஆத்திரேலியம் |
|---|---|
| ஏன், யான், நான் | nga, ngali, ngatsa, nganya |
| நீன், நீ | ninna, nginne, ngintoa, ningte |
| நீம், நீயிர், நீவிர், நீர் | nimedoo, nura, niwā, ngurle |

| தமிழ் | சீனம் |
|---|---|
| நான், நாம் | ngo wo; women |
| நீன்-நீ, நீம் | .ni, nimen |
| தான், தாம் | .ta, tamen |

நகரம் ஞகர மகரமாகவும், மகரம் வகரமாகவும், திரிதல் இயல்பே. தன்மைப் பன்மைப் பெயர் ஆங்கிலத்தில் 'we' என்றும் வடமொழியில் வயம் என்றும் திரிந்திருத்தல் காண்க.

'மேன்' (men) என்பது சீனத்தில் வகுப்பைக் குறிக்கும் தொகுதிப்பெயர். அது மன் என்னும் தென் சொல்லொடு தொடர் புடையதா யிருக்கலாம்.

மன் — மன்று — மந்து — மந்தை. மன்னுதல் = கூடுதல், மிகுதல், பெருத்தல்.

ஐம்பாற் படர்க்கைச் சுட்டுப் பெயர்கள் தோன்றுமுன் தான் தாம் என்பன படர்க்கைச் சுட்டுப் பெயர்களாகவே யிருந்தன.

பா். (Dr.) N. இலாகோவாரி (Lahovary) தம் 'திரவிடத் தோற்றமும் மேற்கும்' (Dravidian Origins and the West) என்னும் ஒப்பியன் மொழி நூலில், தமிழொடு தொடர்புள்ள மேலை யாசிய மேலையைரோப்பிய இடப் பெயர்கள், பூதப் பெயர்கள், மக்கட் பெயர்கள், உறவுப் பெயர்கள், பல்வகை உயிரினப் பெயர்கள், நிலைமைப் பெயர்கள், பல்வேறு வினைச்சொற்கள், பெயரெச்சங்கள் முதலிய நூற்றுக்கணக்கான சொற்களின் மூலத்தை அறியாது, அவற்றைத் தம் கொள்கைக்குச் சான்றுபோல் எடுத்துக்காட்டி, உண்மையில் தம் கொள்கையைத் தாமே மறுத்திருக்கின்றார்.

எ - டு: மல் = வளம். மல்—மல்லல் = வளம். ''மல்லல் வளனே'' (தொல். உரி. 7). மல்—மலை = இயற்கை வளம் மிக்கது. ''வறப்பினும் வளந்தரும் வண்மையும் மலைக்கே'' (நன். பாயி. 28). இப் பொருளை மேலை மொழிகளிற் காண முடியாது, இங்ஙனமே ஏனையவும்.

"Compare Cymri (Wales). "It is stated that the original home of the Cwmry, Cumri, or Cymry was in Sonthern Hindustan, the southern extremity of which Cape Comorin, takes the name from the same root"—From a Historical Souvenir issued on the occasion of the meeting of the British Medical Association at Swansea, 1903—Editors."—

A Comparative Grammar of the Dravidian or South-Indian Family of Languages, Third Edition, Introduction, p., foot-note

பேரா. V. R. இராமச்சந்திர தீட்சிதரின், Origin and Spread of the Tamils, Pre-Historic South India என்னும் வரலாற்று நூல்களைப் பார்க்க.

**தமிழன் பிறந்தகமே மாந்தன் பிறந்தகம்**

"ஏதேன் தோட்டத்தை (மாந்தன் பிறந்தகத்தை) மடகாசுக் கர்த்தீவின் பாங்கர்க் காணவேண்டும்" என்பது எக்கேல் (Ernest Haeckel) கூற்று—History of Creation.

**கென்யாவிற்** (Kenya) கண்டெடுக்கப்பட்ட மாந்தன் மண்டை யோடு இதுவரை கண்டவற்றுள் மிகப் பழைமையானதா யிருக்கலாம் என்பது, **இலீக்கி** (Richard Leakey) என்னும் ஆங்கில மாந்தனூ லாராய்ச்சியாளர் கருத்து.

மடகாசுக்கர் மட்டத்திற் சற்றுக் கிழக்கே தள்ளியிருந்ததே தமிழன் பிறந்தகம்.

> **"பஃறுளி யாற்றுடன் பன்மலை படுக்கத்துக்**
> **குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள**
> **வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு**
> **தென்றிசை யாண்ட தென்னவன் வாழி."**

(சிலப். *11 : 19-22*)

**தமிழ் எழுத்துத் தோற்றக்காலம்**

தலைக்கழகத் தோற்றம் கி. மு. 10,000 ஆண்டுகட்கு முந்தியது. அதற்குமுன் மூவதிகார இலக்கணமும் வகுக்கக் கால் நூற்றாண்டேனுஞ் சென்றிருத்தல் வேண்டும். இலக்கணத்திற்கு முன் பல்துறை இலக்கியம் தோன்ற அரை நூற்றாண்டு சென் றிருக்கும். அதற்குரிய எழுத்துத் தொகுதி அல்லது வண்ணமாலை, படவெழுத்து, கருத்தெழுத்து, அசையெழுத்து, ஒலியெழுத்து என்னும் நால்நிலை கடந்து திருந்திய நிலைபெறக் கால் நூற்றாண்டா யிருக்கும்.

இலக்கிய விலக்கணப் புலவியம் பனையேட்டில் எழுத்தாணி கொண்டு சுழித்துக் கீச்சி எழுதப்பட்டது. ஏட்டின் இடப்பக்கம் (அடிப்பக்கம்) அகன்றும் வலப்பக்கம் (நுனிப்பக்கம்) சிறுத்தும் இருப்பதனால், இடம் வலமாக எழுதப்பட்டது. பட்டவன் பீடு கல்லிலும், வேந்தன் பட்டயம் கல்லிலும் செம்பிலும், பொறிக்கப் பட்டன. ஏட்டெழுத்து வளைகோடும் வெட்டெழுத்து நேர்கோடும் மிக்கிருப்பதே இயற்கை.

உயிரும் மெய்யும் மட்டும் உள்ள வண்ணமாலை குறுங்கணக்கு என்றும், உயிர்மெய்யொடுங் கூடியது நெடுங்கணக்கு என்றும், பெயர் பெற்றன. பிறநாட்டு வண்ணமாலைகளெல்லாம் குறுங் கணக்கே. அதோடு உயிர், மெய், உயிர்மெய்; குறில், நெடில்; வலி, மெலி, இடை, என்னும் வரிசையொழுங்கும் பிறப்பியல் முறையும் இல்லாது ஒன்றோடொன்று கலந்திருப்பன. உலகில் முதன்முதல் உயிர்மெய்யோடு கூடியதும்,

"என்பெயர் முறைபிறப் புருவம் மாத்திரை
முதலீ றிடைநிலை போலியென் றகமும்
கிளவி புணர்ச்சி யெனுமிரு புறமும்"

ஆகப் பன்னிருவகையில் இலக்கணங் கொண்டதுமாகத் தோன் றியது தமிழ் நெடுங்கணக்கே.

இனி, 'அலெக், பேத்' என்றோ, 'அல்பா, பேற்ற' என்றோ, 'ஏ, பீ' என்றோ சொல்லாது, குறிலுக்கு அன்ன என்னுஞ் சாரியை யும் நெடிலுக்கு அன்ன என்னுஞ் சாரியையும் கொடுத்து, 'அ அன்ன, ஆ அன்ன' என்று ஒலியியல் முறையிலேயே தமிழர் தம் சிறுவர்க்குத் தொன்று தொட்டுப் பயிற்றி வந்ததும் சிறப்பாகக் கவனிக்கத்தக்கது.

## வடமொழி திரவிட வண்ணமாலைகள்

கிரேக்கத்திற்கும் பழம் பாரசீகத்திற்கும் நெருங்கிய ஒரு மொழியைப் பேசிய வகுப்பார், எழுத்தும் எழுதப்பட்ட இலக்கியமு மின்றி, கன்றுகாலி மேய்க்கும் முல்லை நாகரிக நிலையில் கி. மு. 2000 ஆண்டுகட்குப் பின் சிறுசிறு கூட்டமாக வட இந்தியா புகுந்து சிந்துவெளியில் தங்கித் தம் சிறு தெய்வ வழுத்துக்களை எழுதாக் கிளவியாகக் கொண்டிருந்து, தமிழரின் தலைமையான நாகரிகத்தைக் கண்டபின், அவர் மதங்களாகிய சிவனியத்தையும் மாலியத்தையும் தழுவி, தமிழ் நெடுங்கணக்கைப் பின்பற்றி வட மொழி வண்ணமாலையை அமைத்துத் தமிழிலக்கியத்தைத் தொடர்ந்து மொழிபெயர்க்கவும் தம் மேம்பாட்டை நாட்டுதற் கேற்றவாறு தொன்மங் (புராணங்) களைப் புனையவும் தலைப்பட்டனர்.

பிற்காலத்தில், வடமொழி வண்ணமாலையைப் பின்பற்றிப் பல திரவிட இனத்தாரும் தத்தமக் கேற்றவாறு வண்ணமாலை வகுத்துக் கொண்டனர்.

## வடமொழி வண்ணமாலையின் பின்மை

1. வடமொழி காலத்தால் தமிழுக்குப் பல்லாயிரம் ஆண்டு பிந்தியது. தமிழ் திரிந்து திரவிடமாகித் திரவிடம் ஆரியமாக

மாறியபின், அதன் ஒரு பகுதி வடஇந்தியப் பிராகிருதத்துடன் கலந்து வேத மொழியாயிற்று. அவ் வேத மொழி தமிழுடன் கலந்து சமற்கிருதந் தோன்றிற்று.

2. கிரேக்கத்தில் Th, Ph, Kh என்ற மூவெழுத்துக்களே மூச் சொலியுடன் கூடியவை. சமற்கிருதத்தில் க ச ட த ப ஆகிய ஐந்து வல்லெழுத்துக்களும் மூச் சொலியுடனும் எடுப் பொலியுடனும் சேர்த்து, வலிப்பொலி, உரப்பொலி, எடுப்பொலி, கனைப் பொலி என நந்நான்காக வகுக்கப்பட்டுள்ளன.

3. ஆ, ஈ, ஊ (அ, இ, உ) ஆகிய மூன்றும் தமிழில் முதன் முதல் தோன்றிய சுட்டெழுத்துக்கள்.

ஆரியச் சுட்டுச் சொற்கட்கெல்லாம் மூலம் தமிழ்ச் சுட்டெழுத் துக்களே. கால்டுவெல் திரவிட ஒப்பியலிலக்கணம் (சென்னைப் பதிப்பு) 421 ஆம் 422 ஆம் பக்கம் பார்க்க.

4. 'ரு', 'லு' என்பவை உயிரெழுத்துக்களல்ல; குற்றிய லுகரத்தொடு கூடிய ரகர லகர மெய்கள்.

5. கிரேக்கத்தில் க்ஸ் (ks, x) என்றுள்ள இணைமெய் வட மொழியில் க்ஷ் (க்ஷ, ksh) என்று வளர்ச்சியடைந்துள்ளது.

6. தமிழ் ஆய்தமே வடமொழி விஸர்க்கம்.

7. வண்ணமாலை வரிசையமைப்பிலும் உயிர்மெய் யமைப்பி லும், வடமொழி முற்றும் தமிழைப் பின்பற்றியதே.

8. அம், அ: என்று இறுதியிற் சேர்த்திருக்கும் இரண்டும் தனிக்குறிலை யடுத்த மெய்யான அசைகளே யன்றித் தனி யெழுத் துக்களாகா; ஒரு போதும் தனி உயிர்களாகா.

### தி. நா. சுப்பிரமணியன் தவறு

திரு. தி. நா. சுப்பிரமணியனார் தமிழின் தொன்மை முன்மை களை அறியாது, கி. மு. 3 ஆம் நூற்றாண்டில் வடநாட்டினின்று வந்து தமிழகத்தில் தங்கிய சமண புத்தக் குகைவாணர், வேலை யின்றி வெட்டி வைத்த பிராமிக் கல்வெட்டெழுத்துக்களையும் பிற் காலக் கல்வெட்டுக்களையும் துணைக்கொண்டு, நரி தன் வாலால் கடலாழத்தைக் கண்டது போல, பண்டைத் தமிழ் எழுத்துக்களைப் பற்றி வரைந்து 1938 ஆம் ஆண்டில் வெளியிட்டிருப்பது உண் மைக்கு முற்றும் மாறுகும்.

ஆரியர்க்கு முற்றும் அடிமையாய்ப் போன முது குடுமிப் பெருவழுதி காலத்திலிருந்து, தமிழ் எழுத்திலும் இலக்கியத்திலும் தமிழர் வாழ்க்கை வழிபாட்டு முறைகளிலும், பல தவறுகளும் தாறுமாறுகளும் நேர்ந்துள்ளன. தமிழ்க்காப்பு தமிழர் கையினின்றும் நழுவிவிட்டது. வடசொற்களும் சொற்றொடர்களும் வடவெழுத்துக்களும் கல்வெட்டிற் கலந்த தொடு, வடமொழிக் கல்வெட்டுக்களும் படிப்படியாய்த் தோன்றியுள்ளன. இரண்டோரிடத்தில் வடமொழிக் கல்வெட்டே தோன்றியுள்ளது.

கிறித்துவிற்கு முற்பட்ட அல்லது கிறித்தவ வூழித் தொடக்கத்தில் எழுதப்பட்ட ஏட்டுச்சுவடி ஒன்றும் இன்று இன்மையால், கல்வெட்டெழுத்தைக் கொண்டு பண்டைத் தமிழெழுத்தைக் கணித்தறிய முடியாது.

யாப்பருங்கல விருத்தியில் கூறப்பட்ட உருவெழுத்து, உணர்வெழுத்து, ஒலியெழுத்து, தன்மை யெழுத்து என்னும் நான்கையும், திரு. தி. நா. சுப்பிரமணியனுர் பிறழவுணர்ந்திருக்கின்றுர். இது அடுத்த கட்டுரையில் விளக்கப்படும்.

தி. நா. சு.வின் பண்டைத் தமிழெழுத்துக்களை நம்பி, தமிழறியாத சிலர் எழுத்துச் சீர்திருத்தம் என்று எழுத்துச் சீர்கேடான வரிவடிவுகளை வெளியிட்டிருப்பது, எள்ளி நகையாடத் தக்கது. '|' என்னும் ஒற்றை நேர்கோட்டினின்று திடுமென்று முச்சுழி 'ண' தோன்றியதென்றும், ஆய்த முப் புள்ளியினின்று 'இ' தோன்றிய தென்றும் காட்டியிருப்பதை நம்புவார், கடுகளவும் பகுத்தறி வுள்ளவராகார்.

### வரலாற்றின் மாருத்தன்மை

மக்கள் விரும்பின், மறைநூல்களையும் மாற்றலாம். ஆயின், உண்மையான வரலாற்றை எல்லாம் வல்ல இறைவனும் மாற்ற முடியாது. மாற்றின், மெய்யனுன இறைவன் பொய்யனுகித் தன் இறைமையை முற்றும் இழந்துவிடுவான்.

———

வரலாறு என்பது விளக்கச் சான்றுகளுடன் நல்லுரை தரும் மெய் விளக்க நூல் துறை எனலாம்.

**வைக்கவுண்ட் பாலிங்புரோக்**
(ஹென்ரி செயின்ட் ஜான்)

# இயற்கை ஓவியம்—குருகுக் குடும்பம்

[புலவர், இரா. இளங்குமரன்]

"சான்றோரும் உளரோ ? சான்றோரும் உளரோ? எவரோ பெற்ற பிள்ளையை, இரக்கத்தால் எடுத்து வளர்க்கும் சான்றோரும் உளரோ ? சான்றோரும் உளரோ ?" என்று **கண்ணகியார்** மாநகர் மதுரையிலே வினவினார். அவ் வினாவின் ஆழத்தை அரு ளாளரே அறிவர்.

தாயில்லாப் பிள்ளை, 'தூவாக் குழவி' எனப்படும் (புறம். 4. 379 ; மணிமே. 13 : 11). பாலூட்டுதற்குரிய வாய்ப்பற்ற குழந்தை என்பது இதன் பொருள் ; தாயில்லாப் பிள்ளைக்கும் தக்க வாழ் வுண்டு என்பதைத் தன் பெயரால் நாட்டுக்குப் பறையறைந்து காட்டுகிறது, திருச்சியை அடுத்துள்ள **'தூவாக்குடி'**.

'குழவி பலி' என்பது குழந்தைக்கு ஊட்டும் சோறு. 'குழவி பலி கொடுப்பது அறங்களுள் சிறந்ததாகக் கண்டது தமிழர் வாழ்வு. 'குழவி பலி' என்னும் அறத்தையே 'குழவிப் பலி' யாக்கிக் 'குழந்தைகளைப் பலியூட்டுதல்' எனப் போலிப் புலமையால் பொருந்தாக் கதை கட்டியவர்கள் உண்டு. குழந்தைகளைப் பலி யிட்ட கொடியவர்களும் கூட இருந்தனர்.

"தம் பொருள் என்ப தம்மக்கள் !" ஆதலால், தம் மக்களை எவரும் போற்றுவர் ; சீராட்டுவர் ; பாராட்டுவர் ; அவர் மழலை, 'குழலும் யாழும் அமிழ்தும் குழைத்த'தாகத் தித்திக்க மகிழ்வர் ; அவர் 'மெய் தீண்டல் உடற்கு இன்பமாக' உவகை பூப்பர் ; அவர் 'சிறுகை அள்ளிய கூழை' அமுதெனக் கருதி அகங்களிப்பர். ஆனால், பிறர் பெற்ற பிள்ளையின் இயலையும் செயலையும் அப்படிப் போற்றிக் கொள்வரா ?

போற்றும் அருளாளர் முன்னும் இருந்தனர். இப்பொழுதும் இருக்கின்றனர். பாலைக் கொடுமைக்குப் பசுஞ்சோலையாகத் திகழ் பவர் அத்தகையரே !

நாட்டுப்புறச் சிற்றூர் மடங்களிலே வழிப்போக்கர் வந்து தங் குவர் ; வாயிழந்து கேட்டு, வாங்கியுண்ணும் வழக்கம் அறியாதவ ராகவும் இருப்பர் ; அவர்களுக்கு ஒரு வீட்டிலே சோறு போட இயலாது. அவர்களைப் பசித்துக்கிடக்க விட்டாலும் ஊருக்கு இழிவு. ஆதலால், ஊர்ச் சிறுவர்கள் சிலராகச் சேர்ந்து, வீடு களுக்குச் சென்று 'அம்மா தருமச் சோறு' என வாங்கிக்கொண்டு வந்து வழிப்போக்கர்களின் பசியை ஆற்றுவர். இவ் வழக்கம் இப் பொழுதும் காணக்கூடியதே. இவ் வழக்கத்தின் பழஞ்சான்றுகத்

திகழ்ந்தவர் ஆபுத்திரனும், மணிமேகலையாரும். முன்னவர் காணுர், கேளார், கால்முடமாயோர், பேணு மாந்தர், பிணி நோயுற்றோர் ஆயோர்க்கெல்லாம் அமுதம் அளித்த பெருந்தகை. பின்னவர், அத் திருப்பணியுடன் சிறைக்கோட்டத்தையும் அறக்கோட்டம் ஆக்கிய அருளரசியார்!

இவ்வாறு பிறர்க்கென வாழும் பெருந்தகைமை, மக்கள் உள்ளத்தே பெருகவேண்டுமெனச் சான்றோர் விரும்பினர். புலமையாளர் ஆர்வம் கொண்டனர். அவ் வார்வத்தைத் தம் கற்பனை ஓவியங்களில் படைத்துக் காட்டினர். அவற்றுள் ஒன்று திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழில் அமைந்துள்ளது.

அலைமோதி ஆர்க்கும் கடலின் கரையில் அமைந்தது திருச்செந்தூர். 'திருச்சீர் அலைவாய்' என்பது அதன் பொருள் வளமிக்க பெயர். அங்குக் கோயில் கொண்டவன் 'பெரும்பெயர் முருகன்'. அவன் திருவளர் மண்ணிலே காணும் 'வண்மைப் புதுமை யைக் கண்டு களிப்புறுகிருர் பகழிக் கூத்தர். புள்ளிமான் வளர்த்த வள்ளி மானைப் போற்றிக் காத்தவர் மலைவேடர். அவ் வேடர் மகளைக் காதலால் கனிந்துருகிக் கைப்பிடித்தவன் கதிர்வேலன். அவன் அருளாட்சி யிடத்திலே புலவர் கண்ட புதுமை பொருத்த மிக்கதேயாம்.

வெண்ணிலவின் பொழிவோ, வெண்டாமரை இதழோ, பாலின் பெருக்கோ எனத் தக்க வெண்ணிறச் சிறகுகளை யுடைய அன்னங்கள் செந்தில்மாநகரில் திரிகின்றன. அவற்றுள் ஆணன்னம் உண்டு; பெண்ணன்னம் உண்டு; பிள்ளையன்னமும் உண்டு. ஆனுல், பெண்ணன்னம் பேரருள் பெருக்குடையது. ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்க்கும் உரிமை யன்பு மிக்கது. அதற்கு வாய்த்த அருமைத் துணையாக ஆணன்னம் விளங்குகிறது! இவற்றின் வாழ்வுச் சிறப்பைக் கூறவேண்டுமா?

கடற்கரையில் தாழைகள் நிரம்ப உள்ளன. அதன் வழவழப்பான வெண்ணிற உள்மடலைப் பெண்ணன்னம் எடுத்து மடிமேல் வைத்துக்கொள்கிறது. மணம் பரப்பும் அம் மடலே பெண்ணன்னத்தின் மகிழ்வுக்குரிய மகவு! அதனை எப்படிச் சீராட்ட வேண்டுமோ, எப்படிப் பாராட்ட வேண்டுமோ அப்படி யெல்லாம் சீராட்டிப் பாராட்டிக் கொஞ்சிக் குலவுகிறது. கொஞ்சுதல் இன்பம் தருவதே எனினும் குழந்தைக்குப் பசியைப் போக்கி விடுமா?

மணற் பரப்பில் சங்குகள் பரவிக் கிடக்கின்றன. அவற்றுள் வரிகள் மிக்க பெரிய சங்கொன்றைத் தேர்ந்து எடுக்கின்றது பெடையன்னம். கடலை அடுத்த பொய்கையில் வளமாகக் குவளைகள்

வளர்ந்துள்ளன. அவற்றில் தேன் நிரம்பி வழிகின்றது. அத் தேனைச் சங்கில் எடுத்துக்கொள்கின்றது அன்னம்! தாழைமடற் குழந்தைக்கு அத் தேனை ஆர்வத்தால் பாலாகப் புகட்டுகின்றது. 'அப் பால்' பருகிய குஞ்சுக்கு 'அப்பால்' என்ன வேண்டும்? உண்ட மயக்கம் உறக்கத்தில் சேர்க்காதா ?

மணற் பரப்பை மேடுபள்ள மில்லாமல் சமனுகத் தட்டுகிறது அன்னம். மணற்பரப்பிலே அன்புக் குழந்தையைப் புரளவிட அவ் வருமைத் தாய்க்கு மனமில்லை. வெண்டாமரை மலரில் உள்ள நீண்டதோர் இதழைப் பறித்து விரிக்கிறது. அதன் மேல் குழந்தையைப் போடுகிறது கண்ணயர! அரவணைப்பு இன்றி அக் குழந்தையைத் தனியே படுத்துக்கொள்ள விடலாமா? தாய்மைப் பெருக்கிற்குத் தக்கதோ அது? ஆதலால், குழந்தையைப் படுக்க வைத்துத் தானும் உடன்படுத்துத் தழுவிக்கொள்கிறது! தட்டிக் கொடுக்கிறது! அயர்ந்து உறங்க ஆகும் வகைகளைச் செய்கின்றது.

பிள்ளைக் குழந்தைக்குப் பாலூட்டி உறங்கச் செய்துகொண்டிருந்தால் பெண்ணன்னத்திற்குப் பசி ஏற்படாதா? உள்ளத்தின் உவகை உடற்பசியைத் தடுத்திருக்கலாம்; பசி தோன்று வண்ணம் அதன் உருக்கமும் துணைபுரிந்திருக்கலாம். தன் இனிய வாழ்க்கைத் துணைவியின் பசித்துயர் ஆணன்னத்திற்குத் தெரியாமல் இருக்கக் கூடாதே. "எத்துணை முறை தன் பசியை மறந்து எனக்கு ஊட்டியது அது" என்று எண்ணியது ஆண் அன்னம்! அதனை நினைத்து உருகியது! அவ் வுருக்கம் பிடர் பிடித்துத் தள்ளியது; ஓடிப்போய் இரைதேடிக் கொணர்ந்தது!

இரையைத் தான் தின்றதா ஆணன்னம்? 'தான் தின்னியா' அது? பெண்ணின் பெருமை யுணர்ந்தன்றோ அதனைப் பேணுதற்கு இரைதேடிச் சென்றது? அதனால், தன் வாயில் பெய்துள்ள இரையைத் தன் பெட்டைக்கு ஊட்ட முனைந்தது; முயன்றது. ஆனல் எளிமையாக நிறைவேறவில்லை. தன் கணவன் உண்ணுமல் தான் உண்ண விரும்புமா பெட்டை? ஆணுக்குள்ள பரிவு, பெண்ணுக்கு இல்லாமல் போகுமா? தனக்காகத் தேடிச் சென்று தணியாக் காதலால் இரை கொணர்ந்த அதனை விடுத்துத் தானே உண்ணப் பொறுக்குமா? வாயை நன்ருக இறுக்கி மூடிக் கொண்டது!

ஆணுக்குப் பெண்ணின் அருமை புரிந்தது! தன் ஆற்றலும் புரிந்தது. அதனுல் தன் வலிமையைக் காட்டி ஊட்டக் கிளர்ந்தது. இக் கிளர்ச்சி வன்புக் கிளர்ச்சி இல்லையே! அன்புக் கிளர்ச்சி தானே! குடும்ப வாழ்வை உயர்த்தும் குணத்தால் உயர்ந்த கிளர்ச்சி தானே! அதனுல் பெண் அன்னத்தின் கூர்மையான அலகைத்

தன் அலகைச் செலுத்தித் திறந்தது. தன் வாயில் உள்ள தீனியைத் திணித்தது! பெண் அன்னத்தின் குடல் மட்டுமோ நிரம்பும்? உள்ளமும் உவகையால் நிரம்பி வழியாதா?

வாழ்வு என்பது என்ன? தனக்காக வாழ்வதா? ஒருவர் ஒருவருக்காக—பலருக்காக—உலகுக்காக—வாழும் வாழ்வே வாழ்வு! பெருகிப் பெருகிப் பேருகத் திகழ்வது வாழ்வு! பிறவிப் பயனைப் பெற்ற வெற்றியே வாழ்வு! இவ் வாழ்வைக் 'குருகுக் குடும்ப'த்தின் வழியே குறிப்பாக விளக்கினுர் பகழிக் கூத்தர். குருகுக் குடும்பக் குறிப்பு நம் குடும்பத்திற்கு வேண்டாவா? பெண்ணும் ஆணும் இவ்வாறு உலகைப் பேணத் தொடங்கினுல் அந்த உலகம் தானே இன்ப வுலகம்? அவ் வுலகைப் படைக்கும் படைப்பாளியாக நாம் இருப்பதைப்போல ஒரு பேறு உண்டோ?

திருச்செந்தூர் வண்மைப் புதுமையைத் தேனெழுகக் கூறும் திருப்பாட்டைக் கேட்போம். அவ் வியற்கை ஓவியத்தை உள்ளத்தில் பதிப்போம்:

"வெண்மைச் சிறைப்புள் ஓதிமங்கள்
விரைக்கே தகையின் மடலெடுத்து
விரும்புங் குழவி எனமடியின்
மீதே இருத்திக் கோதாட்டித்
திண்மைச் சுரிசங் கினில்குவளைத்
தேறல் முகந்து பாலூட்டி
செழுந்தா மரைநெட் டிதழ்விரித்துச்
சேர்த்துத் துயிற்றித் தாலாட்டப்
பெண்மைக் குருகுக் கொருசேவல்
பெரிய குருகு தன்வாயில்
பெய்யும் இரையைக் கூரலகு
பிளந்து பெட்பின் இனிதளிக்கும்
வண்மைப் புதுமைத் திருச்செந்தூர்
வடிவேல் முருகா வருகவே
வளரும் களப மார்பிலங்கு
வள்ளி கணவா வருகவே"

[சிறை - சிறகு; ஓதிமம் - அன்னம்; விரை - மணம்; கேதகை - தாழை: கோதாட்டி - சீராட்டி; நீராட்டியுமாம்; சுரிசங்கு - வளைந்த சங்கு; தேறல் - தேன்; குருகு - அன்னம்; நாரையுமாம்; பெட்பு - விருப்பம்.]

———

# வள்ளலார் வகுத்த சுத்த சன்மார்க்கம்

[டாக்டர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ., பிஎச்.டி.,
தமிழ்த்துணைப் பேராசிரியர், அ. வ. அ. கல்லூரி, மாயூரம்]

(முன் இதழ் ௧௭௬ ஆம் பக்கத் தொடர்ச்சி)

**மரணமிலாப் பெருவாழ்வு :**

இனி, முன்னர்க் குறிப்பிட்டவாறு சமரசசுத்த சன்மார்க்க நெறியைக் கடைப்பிடிப்போர் அடையும் நலங்களை அடிகளார் ஆங்காங்குக் கூறிச் செல்வர். ''மரணமிலாப் பெருவாழ்வு'' என்று இதனைச் சுருக்கமாகக் கூறலாம். ''சன்மார்க்கத்தின் முடிவு சாகாத கல்வியைத் தெரிவிப்பதேயன்றி வேறில்லை; சாகின்றவன் சன்மார்க்க நிலையைப் பெற்றவனல்லன்; சாகாதவனே சன்மார்க்கி'' என்று உரைநடையாகவும், ''சன்மார்க்கம் இறப்பொழிக்கும் சன்மார்க்கம் தானே'' என்று கவிநடையாகவும் அடிகளார் இதனை விளக்குவர்.[8]

*''மரணமில்லாப் பெருவாழ்வில்*
*வாழ்ந்திடலாம் கண்டீர்*
*புணர்ந்துரையேன் பொய்புகலேன்*
*சத்தியம் சொல்கின்றேன்''*

என்று ஆணையிட்டும் இவ்வரும்பயனை அடிகளார் கூறக் காணலாம்.[9] ''தூக்கத்தை ஒழித்தால் ஆயுசு விருத்தியாகும். ஒருவன் ஒருநாளைக்கு இரண்டரை நாழிகை தூங்கப் பழக்கம் செய்வானானால் அவன் ஆயிரம் வருடம் ஜீவித்திருப்பான். எப்போதும் மறப்பில்லாமல் ஆசானுடைய திருவடியை ஞாபகம் செய்துகொண்டிருப்பதே சாவாத கல்விக்கு ஏதுவாகும்'' என்று இதற்கு ஓர் உபாயமும் அடிகளார் உரைத்துள்ளனர்.[10]

''யாரிடத்தில் தயவு அதிகப்பட்டிருக்கின்றதோ, அவரிடத்தில் கடவுளிருக்கின்றார். அந்தத் தயையில்லாதவர்களிடத்துக் கடவுள்

---

8. பாலகிருட்டிணப் பிள்ளை பதிப்பு - திருவருட்பா - புத்தகம் 4; பக். 63.

9. 6-மரணமிலாப் பெருவாழ்வு-1.

10. பா. பி. பதிப்பு. திருவருட்பா-புத். 4. பக். 67.

இருந்துமில்லாமையாய் இருக்கின்றார். கடவுளிடத்தில் காதலன்பும் பக்தியும் செலுத்த வேண்டும்''.

''பிரும்ம ஞானத்தால் என்றுமழியாத ஸ்வர்ண தேகம் பெற்றவன் சாவமாட்டான் என்பதோடு அவன் கடவுள் மயமாகிறான்.'' என்னும் பகுதிகள்[11] சாகாக் கல்வியை விழையும் சன்மார்க்க நெறியாளன் சிந்திக்க வேண்டிய செய்திகளாக அடிகளார் உரைக்கும் அரும்பொருள்கள்.

**திருமூலர் திருவாக்கும் சன்மார்க்கமும் :**

இயற்கைத் தொன்மைநெறி ஆகிய சுத்தசன்மார்க்கம் அடிகளார் வகுத்த நெறி. ஆயினும் சன்மார்க்கம் பற்றிய முதற் குறிப்புத் திருமூலர் திருமந்திரத்தில் காணப்படுகின்றது. திருமூலர் சன்மார்க்க நெறியின் அடிப்படைக் கருத்தை முதற்பாட்டிலேயே மொழிகின்றார்; தொடர்ந்து ஒன்பது பாடல்கள் இந் நெறி பற்றி உரைக்கின்றன. கூற்றத்தை வெல்லுதலே சன்மார்க்கத்தின் மூலக்கருத்து என்பது முதற்கண் உரைக்கப்பட்டுள்ளது.[12]

*''சாற்றுஞ்சன் மார்க்கமாம் தற்சிவ தத்துவத்*
*தோற்றங்க ளான சுருதிச் சுடர்கண்டு*
*சீற்ற மொழிந்து சிவயோக சித்தராய்க்*
*கூற்றத்தை வென்றார் குறிப்பறிந் தார்களே''*

''சாகாதவனே சன்மார்க்கி'' எனமொழியும் வள்ளலார் இத் திருமூலர் கருத்துக்கே புதுவிளக்கம் தருகின்றார். ''என்மார்க்கம் இறப்பொழிக்கும் சன்மார்க்கம் தானே'' என்று வள்ளலார் மொழிகின்றார்.[13]

**சன்மார்க்க சாதனங்கள் :**

இச் சன்மார்க்கத்திற்கான சாதனத்தினை அடிகளார் திருவருட்பாவில் பல்வேறு இடங்களிற் புலப்படுத்தியுள்ளனர். அன்புருவாகிய சுத்ததேகத்தைப் பெறுதற்குரிய ஞானசாரத்தை அடிகளார், ''சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞானசாரம்'' எனப் பெயர் சூட்டுவர். ''சர்வசித்தியையும் உடைய கடவுள் ஒருவர் உண்டு என்றும், அவர் ஒருவரே என்றும் உணர்ந்து அவரை உண்மையன்பால் வழிபட வேண்டும். அப்படிப்பட்ட கடவுளை வழிபாடு செய்வதற்குச்

---

11. மேற்படி நூல்-பக். 64, பக். 65.
12. திருமூலர் திருமந்திரம்-1477.
13. உபதேசப்பகுதி-பக். 68; 6-மரணமிலாப் பெருவாழ்வு-26.

சாதனம் இருவகை; ஒன்று பர உபகாரம், மற்றென்று சத்விசாரம். பர உபகார மென்பது தேகத்தாலும், வாக்காலும், திரவியத்தாலும் உபகாரம் செய்வது, சத்விசாரம் என்பது ஆன்மநேய சம்பந்தமான தயா விசாரத்தோடு இருப்பது. கடவுளது புகழை விசாரித்தல், ஆன்மாவின் உண்மையை விசாரித்தல், தன் சிறுமையைக் கடவு ளிடத்தில் விண்ணப்பித்தல், இந்த மார்க்கத்தால்தான் சுத்த தேகம் பெறவேண்டும்.[14]

இந்த இருவகையான சாதனங்களில் பரோபகாரம் புறத்தே நிகழ்வது. சத்விசாரம் அகத்தே நிகழ்வது. யானைமுதல் எறும்பீருக உள்ள உடல்களிலுள்ள ஜீவான்மாவே இறைவன் உறையும் திருச்சபையாகவும், அவற்றினுள் இருக்கும் பரமான்மாவே பதி யாகவும் கொள்ளுதல் வேண்டும்.[15]

> "உயிரெலாம் ஒருநீ திருநடம் புரியும்
> ஒருதிருப் பொதுவென அறிந்தேன்"

ஆன்மாவின் இயற்கை விளக்கமாகிய சீவதயவு எனப்படும் சீவ காருண்யம் நிறையும்போது உயிரொளியில் திருவருள் பெருகும். ஆன்மா கடவுட்டன்மையைப் பெற்றுக் கடவுள் உடம்பெனப்படும் சுத்ததேகம் ஆகின்றது.

> "அருளுலக தத்தனு வும் அசைந்திடா ததனல்
> அருள்நலம் பரவுகஎன் றறைந்தமெய்ச் சிவமே"

> "அருளுறின் எல்லாம் ஆகுமீ தண்மை
> அருளுற முயலுகஎன் றருளிய சிவமே"

> "அருளுறின் துரும்புமோர் ஐந்தொழில் புரியும்
> தெருளிது வெனவே செப்பிய சிவமே"

என்று பல்வேறிடங்களில் வள்ளலார் உரைப்பர்.[16] அருள்நலம் பெறுதற்கு ஆன்மநேய ஒருமைப்பாட்டுணர்வும், சீவகாருண்ய ஒழுக்கமும் வளரவேண்டும். இதுவே சன்மார்க்க நெறி.

**சன்மார்க்க ஒழுக்கம் :**

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களைச் சான்றோர் உரைத்துள்ளனர். இந் நான்கில்

---

14 "சுத்த சன்மார்க்க விளக்கம்" டாக்டர். கு. சீனிவாசன்- பக். 2.

15. திருவருட்பா-ஆறும் திருமுறை-132 : 75.

16. மேற்படி நூல், 1 : 977, 1 : 979, 1 : 983.

சன்மார்க்க நெறியாளன் பெறுதற்குரிய வீட்டிற்குச் சில உறுதிப் பொருள்களைத் தனியே உரைக்கின்றார் அடிகளார். “நாம் பெறும் புருஷார்த்தம் நான்கு. அவையாவன : ஏமசித்தி, சாகாக் கல்வி, கடவுள் நிலையறிந்து அம்மயம் ஆதல், தத்துவ நிக்கிரகம், இவை பெறுவதற்கு ஒழுக்கம் யாதெனின், (அது) நான்கு வகைப்படும். 1. இந்திரிய ஒழுக்கம், 2. கரண ஒழுக்கம், 3. ஜீவ ஒழுக்கம், 4. ஆன்ம ஒழுக்கம்'' என்பது அடிகளார் திருவாக்கு.[17]

இவற்றை அடிகளார் ஒவ்வொன்றாக விளக்குகின்றார். கொடிய சொல் செவி புகாது நாதம் முதலிய தோத்திரங்களைக் கேட்டல், முதலாக அழுக்காடை உடுத்தாதிருத்தல் ஈறாக இந்திரிய ஒழுக்கம் என்று இருபத்தொரு கருத்துக்களை எடுத்துரைக்கின்றனர். மனத்தைச் சிற்சபையின் கண்ணே நிறுத்தல், அஃதாவது முதலில் புருவமத்தியில் நிற்கச் செய்தல் முதலாகத் தனது சத்துருக்களாகிய தத்துவங்களை அக்கிரமத்திற்குச் செல்லாது கண்டித்தல் ஈறாக ஏழு கருத்துக்கள் கரணவொழுக்கம் என்ற தலைப்பிற் கூறப்பெறுகின்றன.

ஆண்மக்கள் பெண்மக்கள் முதலிய யாவர்களிடத்திலும் சாதி, சமயம், மதம், ஆசிரமம், சூத்திரம், கோத்திரம், குலம், சாஸ்திர சம்பந்தம், தேச மார்க்கம், உயர்ந்தோர், தாழ்ந்தோர், என்னும் பேதம் நீங்கி எல்லாரும் தம்மவர்களாய்ச் சமத்திற் கொள்ளுதல் ஜீவ ஒழுக்கம் என்பர் அடிகளார்.

ஆன்ம ஒழுக்கத்திற்கு அடிகளார் கூறும் விளக்கம், சன்மார்க்க நெறியின் முடிந்தநிலைத் தத்துவமாக உள்ளது என்று கூறலாம். யானை முதல் எறும்பு ஈறாகத் தோன்றிய சரீரங்களிலுள்ள ஜீவான்மாவே திருச்சபையாகவும், அதனுள் பரமான்மாவே பதியாகவும் கொண்டு யாதும் நீக்கமற எவ்விடத்தும் பேதமற்று எல்லாம் தானாக நிற்றல் ஆன்ம ஒழுக்கம் என்பது அடிகளார் கருத்துரை. இத்துடன் இடம் தனித்திருத்தல், இச்சையின்றி நுகர்தல், செபதபம் செய்தல், தெய்வம் பராவல், பிறவுயிர்க்கு இரங்கல், பெருங்குணம் பற்றல், பாடிப்பணிதல், பத்தி செய்திருத்தல் – முதலிய நற்செய்கைகளில் பலகால் முயன்று முயன்று பழகிப்பழகி நிற்றல் வேண்டும், என்று வரும் அருளுரை சன்மார்க்க நெறியாளனின் கோட்பாடு வழுவாத்திறம் பற்றி எடுத்துரைப்பதாகவும், மனம் கொள்ளற்குரிய எளிமை உரைப்பதாகவும் உள்ளது.[18]

---

17. மேற்படி பதிப்பு-புத். 4; பக், 49.

18. திருவருட்பா-திருநெறிக் குறிப்புக்கள்.

**சங்க அமைப்பும் சிறப்பும் :**

சுத்த சன்மார்க்க நெறியைத் துலக்குவதற்கு அடிகளார் கண்ட அரும் பெரும் அமைப்பான சன்மார்க்க சங்கத்தின் பொருள் விளக்கத்தை அடிகளார் தம்முடைய பாடல்களில், எண்ணற்ற இடங்களில் எடுத்தோதியுள்ளார்.

''சமரச வேத சன்மார்க்க சங்கம் என்பதற்குப் பொருள்: எல்லாச் சமயங்களுக்கும் பொதுவாகிய அறிவுநூல் முடிபான நான்காவது மார்க்கத்தை அநுஷ்டிக்கின்ற கூட்டம் என்று கொள்க'' ''சுத்தம் என்பது சன்மார்க்கம் என்னும் சொல்லுக்கு முன் வந்தமையால், முன் சொன்ன சமய மதங்களைத் தாண்டினது அதன் அநுபவங்களையும் கடந்தது''.[19]

கி. பி. 1865இல் அடிகளார் இப் பெருநெறி பரப்பும் சங்கத்தைக் கண்டனர். பிள்ளைச் சிறு விண்ணப்பம் என்ற பகுதியில், அடிகளாரது ஆர்வம் பின்வரும் பாடலால் வெளியாகின்றது :

''தங்கமே அனையார் கூடிய ஞான
　　சமரச சுத்தசன் மார்க்கச்
சங்கமே கண்டு களிக்கவும், சங்கஞ்
　　சார்திருக் கோவில்கண் டிடவும்,
துங்கமே பெறுசற் சங்கம்நீ டூழி
　　துலங்கவும், சங்கத்தி லடியேன்
அங்கமே குளிர நின்றனைப் பாடி
　　ஆடவும் இச்சைகாண் எந்தாய்''[20]

அடிகளார் சங்கம் கண்ட சான்றோர் ஆயினும், அதன் தலைவராகத் தம்மை ஒருபோதும் கருதியதில்லை. எல்லாம்வல்ல தனித் தலைமைப் பெரும்பதியாகிய பரம்பொருளே அதன் தலைவர் என்று கொண்டார்.[21]

''செத்தவர்கள் எல்லாம் திரும்ப எழுந்துவரச்
சித்தம்வைத் துச் செய்கின்ற சித்தியனே—சுத்தசிவ
சன்மார்க்க சங்கத் தலைவனே சிற்போற்றும்
என்மார்க்கம் நின்மார்க்க மே''

சன்மார்க்க சங்கத்தை எண்ணுகின்ற போதெல்லாம் வள்ளலார் நெஞ்சத்தில் பரம்பொருளின் பெருங்கருணையே எழுந்து ஓங்கு

---

19. இராமலிங்க அடிகள் வரலாறு-ஊரன் அடிகள்-பக். 268.
20. திருவருட்பா-பிள்ளைச்சிறு விண்ணப்பம்-21.
21. சுத்தசிவ சன்மார்க்க உலகின் ஒருமைநிலை-8.

கின்றது. அந்த உணர்வே பின்வரும் ஆனந்தானுபவமாக வெளி வருகிறது.[22]

"கொள்ளேயென இன்பம் கொடுத்தாய் நினதுசெல்வப்
பிள்ளையென வெற்குப் பெயரிட்டாய்—தெள்ளமுதம்
தந்தாய் சமரசசன் மார்க்கசங்கத் தேவைத்தாய்
எந்தாய் கருணை யிது"

"அகத்தே கறுத்துப் புறத்து வெளுத்திருந்த உலகர் அனைவரையும் சகத்தே திருத்திச் சன்மார்க்க சங்கத்து அடைவித்திட" என்றே தம்மைப் படைத்ததாக அடிகளார், உற்றதுரைத்தலில் உரைப்பர்.[23] இத்திருநெறிச் சங்கத்திற் சேர்ந்து சன்மார்க்கக்கோட்பாட்டைப் பின்பற்ற வம்மின் என்று பெருங்கருணையோடு அழைக்கின்றார் வள்ளலார். "மனிதர்காள் இங்கு வம் ஒன்று சொல்லுகேன்" என்று அழைத்து அறம் காட்டும் அப்பரடிகளாரைப்போல, "சேர வாரும் செகத்தீரே" என்று அருளழைப்பு விடுக்கும் தாயுமானவரைப் போல,[24] அடிகளாரும் பல்வேறிடங்களில் கருணை பெருக் கெடுக்கக் கூவி அழைத்துக் குறிக்கோள் சுட்டுகின்றார்.[25]

"ஆடாதீர் சற்றும் அசையாதீர் வேறொன்றை
நாடாதீர் பொய்வுலகை நம்பாதீர் - வாடாதீர்
சன்மார்க்க சங்கத்தைச் சார்வீர் விரைந்தினியிங்கு
என்மார்க்க மும்ஒன்று மே"

"சன்மார்க்க சங்கத்தைச் சார்ந்திடுமின் சத்தியம்நீர்
நன்மார்க்கம் சேர்வீர்இந் நாள்",

"பன்மார்க்க மெல்லாம் பசையற் றொழிந்தனவே
சன்மார்க்கம் ஒன்றே தழைத்ததுவே - சொன்மார்க்கத்து
எல்லா வுலகும் இசைந்தனவே எம்பெருமான்
கொல்லா நெறியருளைக் கொண்டு"

என்று பாடும் அடிகளார்,[26] இறைவன் ஆணையிட்டபடியே இந் நெறி தலைப்பட்டதாக அறுதியிட்டுரைக்கின்றார்.

---

22. 6-ஆனந்தானுபவம்-4.

23. 6-உற்றதுரைத்தல்-9.

24. அப்பர் தேவாரம்-குறுந்தொகை-பொது-தாயுமானவர்-காக முறவு.

25. 6-சத்த சிவநிலை 41, 42.

26. 6-சற்குருமணி மாலை-12.

"பன்னெறிச் சமயங்கள் மதங்கள்என் றிடுமோர்
பவநெறி யிதுவரை பரவிய திதனால்,
செந்நெறி அறிந்திலர் இறந்திறந் தலகோர்
செறியிருள் அடைந்தனர் ஆதலின் இனிநீ
புன்னெறி தவிர்த்தொரு பொதுநெறி எனும்வான்
புத்தமு தருள்கின்ற சுத்தசன் மார்க்கத்
தன்னெறி செலுத்துக என்றஎன் னரசே
தனிநட ராசஎன் சற்குரு மணியே' [27]

என்பது அக் கருத்தமைந்த திருவருட்பா.

**சன்மார்க்கத்தடைகள் :**

சுத்த சன்மார்க்கத்திற்குத் தடைகளாக உள்ளன யாவை யென்று, தம்முடைய விண்ணப்பப் பகுதியில் அடிகளார் தெளிவாக விளம்புகின்றார் : [28]"எல்லாமுடைய அருட்பெருஞ்சோதி அற்புதக் கடவுளே! இது தொடங்கி எக் காலத்தும் சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய தடைகளாகிய சமயங்கள், மதங்கள், மார்க்கங்கள் என்பவற்றின் ஆசார சங்கற்ப விகற்பங்களும், வருணம் ஆசிரமம் முதலிய உலகாசார சங்கற்ப விகற்பங்களும் எங்கள் மனதில் பற்றா வண்ணம் அருள் செய்தல் வேண்டும்'' எனவரும் பகுதியே அது.

"சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய லட்சியமாகிய ஆன்மநேய ஒருமைப் பாட்டுரிமை'' என்று வரும் பகுதி, சன்மார்க்க நெறியின் அடிப்படைக் குறிக்கோள் எது என்று சுட்டிக் காட்டுவதாக அமைகின்றது. (தொடரும்)

---

## தமிழ் மொழிச் சிறப்பின் உண்மை

தமிழ் மொழியின்கண் உள்ள முப்பது முதலெழுத்துக்களும் மூன்று சார்பெழுத்துக்களுமே குறைபாடில்லாத உறுப்புக்களுடைய மக்கள், குறைபாடில்லாத முயற்சியால் இயற்கையாகப் பிறப்பிப்பனவாகு மென்றும், ஏனை மொழிகளில் இவற்றினும் மிகுதியாகக் காணப்படும் ஏனை எழுத்துக்களெல்லாம் இம் முதலெழுத்துச் சார்பெழுத்துக்களின் உதவியால் குறைபாடுடைய முயற்சி கொண்டு செயற்கைப் படுத்து வருந்திச் சொல்ல வரும் எழுத்துக்களாம் என்றும். எல்லாவாற்றானும் நிறைவுடைய தமிழ்மொழியின் இவ்வுண்மை உணராமல் அதனைக் குறைபாடுடைய தெனவும் குறைபாடுடைய ஏனை மொழிகளை நிறைவுடைய வெனவும் கூறும் கூற்றெல்லாம் ஆழ்ந்து ஆராய்ந்து பார்க்கும் அறிவின் மதுகையின்மையால் வருவனவாம் என்றும் உணர்ந்துகொள்க.

—மறைமலையடிகளார் அறிவுரைக் கோவை, பக். 72

---

27. 6-சுத்த சிவநிலை-22.
28. சுத்தசன்மார்க்க சத்திரச் சிறுவிண்ணப்பம்.

# முதுகலைத் தமிழ்க் கல்வி—சில புதுமுறைக் கருத்துக்கள்

[டாக்டர் ந. சஞ்சீவி; பேராசிரியை கிருட்டிண சஞ்சீவி]

எந்தவொரு திட்டத்திலும்—முறையிலும்—குறைநிறைகள் இருக்கும். காரணம் மனிதனின் படைப்புக்கள் மட்டுகட்கு (limits) உட்பட்டவையே. ஆனல்,

''குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்'' (504

என்ற திருக்குறள் வழி குணம் மிகுதியாக உள்ளதையே கொள்ளல் வேண்டும்.

முன்பெல்லாம் முதுகலைக் கல்வி இரண்டாண்டுகளைக் கொண்டதாகவும் இரண்டாமாண்டின் இறுதியில் எட்டுத் தாள்களை எழுதுவதாகவும் இருந்தது. சில திருத்தங்களுடன்—அதுவும் தேர்வு நிகழ்ச்சி முறையில் இரு தேர்வுகட்கு இடையே இடைவெளி மூன்று நாள்களேனும் இருக்கும் வகையில் சில திருத்தங்களுடன் இம் முறையே சிறந்தது, என்பது எங்கள் கருத்து. தலையாய காரணம் இரண்டாண்டுகள் எல்லாப் பாடங்கள் குறித்தும் அறிய —ஆராய—அசைபோட வாய்ப்புள்ளது என்பதுதான். ஆனல், இப்போது இரண்டாண்டுகளை நான்கு பருவங்களாகப் பிரித்து ஒரு பருவத்துக்கு நான்கு வினத்தாள்கள் வீதம் நான்கு பருவத்துக்குப் பதினறு வினத்தாள்கள் கொடுக்கப்படுகின்றன. இந்த வினத் தாள்களிலும் 50 சொற்களில் விடை கூறும் வகையில் சில வினக் களும் 300 சொற்களில் விடை தரும் வகையில் வேறு சில வினக் களும் 1200 சொற்கள் வரையில் விடை எழுதும் வகையில் மற்றும் சில வினக்களும் அமைந்துள்ளன. பல நேரங்களில் இம் மூன்று வகை வினக்களுக்கும் வேறுபாடில்லாமலும் கேள்விகள் கேட்கப் பட்டுவிடுகின்றன. இதனல் திருத்துவோரும் திருத்தப்படுவோரும் அல்லல்கள் அடைகின்றனர்.

பல ஆண்டுகளுக்கு முன்பிருந்த இரண்டாண்டு இறுதியில் எட்டு வினத்தாள்கள் என்பதற்கும் இப்பொழுது இருக்கும் ஒரு பருவத்திற்கு நான்கு வினத்தாள்கள் வீதம் 4 பருவத்திற்கு 16 வினத்தாள்கள் என்பதற்கும் இடைப்பட்டதாக ஆண்டு இறுதியில் 8 வினத்தாள்கள் என்ற முறையில் ஒரு நடுவழியைப் பின்பற்ற லாம். இவ்வாறு நாங்கள் கருதுதற்குக் காரணம் அரையாண்டுத்

தேர்வு முறையில் (Semester pattern) மாணவர்கள் போதுமான ஆழக்கல்வியைக் கற்க முடியவில்லை என்ற எண்ணமே ஆகும். இதற்கு இரண்டு முக்கிய காரணங்கள்—சிறப்பாக மனித இயல் (humanities) கல்விகளில்—அதிலும் சிறப்பாக மொழித்துறைக் கல்விகளில் (language studies) இருக்கக் காண்கிறோம். முதலாவது, எந்த நோக்கிற்காக—எந்தப் போக்கில் முதுகலைக் கல்வியைக் கற்க வேண்டும் என்பது இன்னும் தெளிவுபடுத்தப்படவில்லை. இதன் காரணமாகப் போதுமான வழிகாட்டி நூல்கள் அமையவில்லை. எடுத்துக்காட்டாக முன்னுளில் முதுகலையில் படித்த பாடங்களையே பகுதி பகுதியாக இப்போது பிரித்துப் படிக்கிறார்கள் என்பதைத் தவிர, படிக்கும் நோக்கிலும் போக்கிலும் பெரிய வேறுபாடுகளும் அந்த வேறுபாடுகளை விளக்கி அமைக்கப்பட்ட நூல்களும் இருப்பதாகத் தெரியவில்லை. மேலும், இளங்கலை வகுப்புக் கல்விக்கும் (B.A.) முதுகலை வகுப்புக் (M A.) கல்விக்கும் நோக்கிலும் போக்கிலும் உள்ள வேறுபாடுகள் அறுதியிட்டு உறுதி செய்யப்படவில்லை. இவ் வுண்மையை இரு நிலைகளிலும் அமைக்கப்படும் வினாத்தாள்களாலேயே விளங்கிக் கொள்ளலாம். இரண்டாவதாக, இளங்கலை முதுகலை வகுப்புகளுக்குரிய வெவ்வேறு தரநிலைகள் (Standards) ஒவ்வொரு பாடத்திற்கும் எவ்வெவ்வாறு வேறுபடுகின்றன என்பதும் துல்லியமாக விளக்கப்படவில்லை. பல்கலைக்கழகங்களில் வினாக்களுக்குரிய சரியான விடைகளைப் பற்றிய தெளிவுகளும்—ஒரு சீரான தன்மையில் திருத்துவோரிடம் இருப்பது இல்லை. (ஒரு சில பல்கலைக்கழகங்களே திருத்துவோர்க்கு விடைகளில் இருக்க வேண்டிய இன்றியமையாக் கூறுகளைக் குறித்துத் தருகின்றன.) எனவே ஒரே விடைத்தாளுக்குப் பலவகையான மதிப்பெண்கள் தரப்படும் நிலை (உரியவர் திருத்தினாலே) உள்ளது. பல பல்கலைக் கழகங்களில் முதுகலை நிலையில் விடைத்தாள்களைத் தக்கவாறு ஓர வஞ்சனை இல்லாமல் மறு மதிப்பீடு செய்து பார்க்கும் வாய்ப்பும் வசதியும் இல்லை. பல நேரங்களில் ஆசிரியர்களுக்கிடையே இருக்கும் மன வேறுபாடுகள் மாணவர்களையும்—தனி முறையில் (by Private Study) எழுதும் மாணவர்களையும் கூடப் பாதிக்கும் நிலை இருக்கிறது. குறிநிலை மதிப்பீடு (Objective Study) என்பது டாக்டர் பட்ட நிலைகளிலேயே தடுமாற்றம் காணும்பொழுது (நேரமின்மை, விருப்பு வெறுப்புக்கள் ஆகியவற்றால்) முதுகலை நிலையைப் பற்றி முணுமுணுப்பதற்கும் இடம் ஏது? அரசாங்கத் துறையைப் போலக் கல்வித்துறையில் (சிறப்பாகப் பல்கலைக்கழக நிலையிலும் தனியார் கல்விக்கூடங்களிலும்) நாட்டில் காவல் துறையும் பெரும் அளவு ஊடுருவ முடியாத நிலையில் சட்டம் உள்ளது. காரணம்: கல்வி நிலயங்களின் சுயாட்சி உரிமை!—அரசாங்க அமைப்புக்களாக இல்லாமை.

இக் கட்டுரையில் ஒருசில மாணவர்களின் ஆகூழ் போகூழ் பற்றி அதிகம் கவலைப்படாமல் பொதுதர உயர்வு பற்றியே சில சிந்திக்கலாம். முதுகலைக் கல்வியில் இடர்ப்பாடு நிறைந்த படிப்பாய் இருப்பது இலக்கணம் / மொழியியல் படிப்பு ஒன்றுதான். ஏனைய படிப்புகள் எல்லாம் நம் இளைஞர்களால் ஊதிவிடக் கூடிய படிப்புதான். இந்த இலக்கணக் கல்வியைத் தக்க நூல்களின் வாயிலாக எளிமைப்படுத்தல் என்பது இயலாத செயல் இல்லை. 5 (ஐந்து) ஆண்டுக் காலத்தில் இதை எவ்வாறு செய்யலாம் என்பது பற்றிச் சில எண்ணங்கள் :

1. தொல்காப்பியத்தில் உள்ள இருபத்து ஏழு இயல்களையும் அடிப்படையாகக் கொண்டு ஒவ்வோர் இயலுக்கும் தனித்தனி நூல்கள் வெளிவரல் வேண்டும். ஒவ்வோர் இயலுக்கும் நான்கு நான்கு நூல்கள் வெளிவருதல் வேண்டும். முதலாவது நூல் ஒவ்வோர் இயலுக்கும் எல்லா உரையாசிரியர்களும் எழுதியிருக்கின்ற உரைகளின் மூலபாடங்களையும் அவ் வுரைகளைப் பத்தாவது படித்த பையனும் வாங்கிக்கொள்ளக்கூடிய வகையில் எளிய, இனிய உரை நடை விளக்கங்களையும் கொண்டதாயிருத்தல் வேண்டும். இரண்டாம் நூல் பேராசிரியர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியம் அவர்கள் முயன்று வெளியிட்டுள்ள இலக்கணத் தொகையின் அடிப்படையைக் கொண்டதாய் இலங்கல் வேண்டும். இதன் பெரும் பயன் தொல்காப்பியக் கருத்துக்கள் கால அடைவில் பெற்ற மாற்றங்களை விளங்கிக் கொள்ளுதல் ஆகும். இந் நூலிலும் பல்வேறு இலக்கண நூல்களின் நூற்பாக்களோடு அவற்றுக்கு எழுதப்பட்டுள்ள உரை மூலங்களும் அவற்றிற்குரிய எளிய உரை நடை ஆக்கங்களும் இடம்பெறல் வேண்டும். மூன்றும் நூலில் எழுத்ததிகாரமாய் இருந்தால் மொழியியலின் ஒலிகள் / ஒலியன்கள் பற்றிய செய்திகளோடும் சொல்லதிகாரமாய் இருந்தால் உருபியல், தொடரியல், பொருளியல் முதலிய மொழியியல் பகுதிகளோடும் பொருளதிகாரமாயிருந்தால் இலக்கியத் திறனாய்வுக் கொள்கைகள், யாப்பியல், பாட்டியல், வடமொழி அணியிலக்கணங்கள் முதலியவற்றோடும் ஒப்புநோக்கி எழுதப்பட்ட விளக்கங்கள் இடம்பெறல் வேண்டும். நான்காவது நூலில் வளரும் ஆராய்ச்சி என்ற தலைப்பில் அந்தந்த இயலுக்குரியனவாய் வெளிவந்துள்ள பதிப்புக்கள், ஆராய்ச்சி நூல்கள், ஆராய்ச்சிக் கட்டுரைகள் ஆகியன பற்றி விரிவான—விளக்கமான—அடைவுகள் அமைக்கப்பட வேண்டும். இப்படி ஒவ்வோர் இயலையும் நான்கு நூல்களின் வாயிலாகப் பத்தாவது படித்தவர் வீட்டிலிருந்து (அஞ்சல்வழிக் கல்விக்கும் பயன்படும் வகையில்) படித்தே பயன் கொள்ளும் நிலையில் மேற்கண்ட நூல்கள் அமைதல் வேண்டும்.

2. இந்த அடிப்படையிலேயே ஏனைய பாடப்பகுதிகளுக்கும் தெளிவான விளக்க நூல்கள் வகுப்புகள் ஆரம்பமாவதற்கு முன்பே வெளியிடப்படுதல் வேண்டும். முக்கியமாக அடைவு நூல்கள் கட்டாயம் வெளியீடு பெற வேண்டும்.

3. இளங்கலை வகுப்புக்கும் முதுகலை வகுப்புக்கும் உள்ள அடிப்படை வேறுபாடு எங்களுக்குத் தெரிந்தவரையில் இதுதான் ; இளங்கலை வகுப்பு விடைகள் பாடப்பகுதிகளை ஐயந்திரிபறக் கற்றிருக்கிறார்களா என்பதை விளக்கிக் காட்டினால் போதும். முதுகலைப் படிப்பிலோ இளங்கலைப் படிப்பிற்குரிய புரிந்துகொள்ளுதல் (more understanding) மட்டும் இல்லாமல் புரிந்துகொண்டதைப் பற்றிச் சிந்தித்தல் (more thinking) இருத்தல் வேண்டும். இந்த அடிப்படை வேறுபாட்டை ஒப்புக்கொண்டால் முதுகலைக் கல்வியின் நோக்கையும் போக்கையும் ஒழுங்குபடுத்துதல் எளிதாகும்— இனிதாகும்.

4. மேற்கண்டவாறு பாடத்திட்டத்தையும் பாட நூல்களையும் அமைத்த பின்னால் எவ்வாறு வகுப்பறையில் பாடங்களை நடத்துதல் என்ற கேள்வி எழுகிறது. அஞ்சல்வழிக் கல்விக்கும் நேர்முகக் கல்விக்கும் இந்த இடத்தில்கூட வேறுபாட்டை மிகப்பெரும் அளவிற்குக் குறைத்தல் கூடும். முன்னதில் எழுத்து பேசும்; பின்னதில் குரல்வளையே பேசும்; அவ்வளவுதான். எங்களுக்கு முதுகலை வகுப்பை நடத்தும் முறையில் ஒரு புதிய கருத்து தோன்றியுள்ளது. அதன்படி முதுகலை வகுப்பாசிரியர் வகுப்பறையில் ஓர் இயக்குநராகவும் (Directer) வழிகாட்டியாகவும் (Guide) தணிக்கையாளராகவும் (Moderator) இருந்தால் போதும். சொல்லுக்குப் பொருள் சொல்லிக் கொடுக்கும் ஆசிரிய (teacher) நிலை இளங்கலை வகுப்போடு விடைபெற்றுக் கொள்ளுதல் வேண்டும். இத்திட்டத்தின்படி ஆண்டின் தொடக்கத்திலேயே இத்தனை வகுப்புகளில் இந்த அளவிற்குப் பாடத்தை முடித்துவிட வேண்டும் என்ற வரையறை வழங்கப்பட்டுவிட வேண்டும். அதன்படி அந்தப் பாடத்தை ஆசிரியர்கள் முன்னிலையில் மாணவர்களே ஒருவர் மாறி ஒருவர் (by turn) நடத்தல் வேண்டும். வேண்டுமானால் ஆசிரியர் முதல் சில வகுப்புகளில் இவ்வாறு கற்றல் வேண்டும் என்பதற்குரிய வகையில் சில முன்மாதிரிப் பாடங்களை (Model lessons) நடத்திக்காட்டலாம்; அவ்வளவுதான். அதற்கப்புறம் அந்த வகையிலோ அதைக் காட்டிலும் சிறந்த வகையிலோ மாணவர்களே முறை வைத்துக்கொண்டு—போட்டி போட்டுக்கொண்டு— பாடத்தை நடத்தல் வேண்டும். இந்தத் திட்டத்தினால் ஏற்படும் பெரு நன்மை : மாணவர்கள் உரிய பாடங்களைக் கட்டாயமாகப்

படிக்கும் நிலை மிகப்பெரும் அளவிற்கு உறுதியாகின்றது. மேலும், இன்னும் ஓரிரு ஆண்டுகளில் தாம் கற்ற கல்வியை மற்ற மாணவர்களுக்குச் சொல்லிக்கொடுக்கும் பொறுப்பினைப் பெரிதும் ஏற்கப் போகும் தலைமுறை தன்னைத் தக்கவாறு தயாரித்துக் கொள்ளவும் முடியும். இந்த இடத்தில் ஆசிரியர்களுக்கு அப்புறம் என்ன வேலை என்ற ஒரு கேள்வி எழலாம். ஆசிரியர்களுக்கு வகுப்பறையைப் பொறுத்தவரையில் 5 அல்லது 10 மணித்துளிகளில் மாணவர்கள் வகுப்பெடுத்த முறை பற்றியும் அவர்கள் விட்டுவிட்ட சிந்தனைகள் குறித்தும் ஆக்கக் கருத்துக்களைத் தெரிவித்தல் வேண்டும். அப்புறம் அவர்கள் வீட்டிலோ வகுப்பறையிலோ எழுதும் பயிற்சிகளை (assignments) திருத்தித் தருதல் வேண்டும். இவையிரண்டையும் ஆசிரியர்கள் செய்தாலே போதும்; பெரும் பயன் கிட்டும். இந்த இரண்டையும் திறம்பெறச் செய்ய ஆசிரியர்கள் மாணவர்களைவிட ஒருபடி மேலாகவே படித்தல்—தயாரித்தல்—பணிபுரிதல் இன்றியமையாதது என்பதும் விளங்கும்.

மேலும், ஆசிரியர்களை மாணவர்கள் ஒருவகை வாக்களிப்புச் செய்தலின் மூலம் மதிப்பீடு செய்யும் (Student valuation of the teacher's) முறையும் நம் கல்வித் திட்டத்தில் உருவாதல் வேண்டும். இதை மிக எளிமையாகச் செய்யலாம். எல்லா ஆசிரியர்களும் அல்லது அவர்கள் பிரதிநிதிகள் இருக்கும் இடத்தில் தனியானதொரு மறைவு அறையில் (polling booth) ஒவ்வொரு மாணவரும் ஒவ்வோர் ஆசிரியர் பெயரிலும் உள்ள பெட்டியில் பிளாஸ்டிக்கில் செய்த வட்ட நாணயங்கள் போன்ற அடையாளங்களைப் போடுதல் வேண்டும். ஒவ்வொரு மாணவரிடமும் 100 அடையாளங்கள் (tokens) இருப்பதாக வைத்துக் கொள்ளலாம். அவர்களுக்குரிய ஆசிரியர்கள் பத்துப் பேர் என்று வைத்துக் கொள்ளலாம். ஒவ்வொரு மாணவருக்கும் ஒவ்வோர் ஆசிரியருக்கும் உள்ள பெட்டியிடம் செல்லும்போது பத்துப் பத்து அடையாளங்கள் கொடுக்கப்படலாம். அவற்றிலிருந்து பத்துக்கு எவ்வளவு அடையாளங்களை அவர் அந்தந்த ஆசிரியருக்குரிய பெட்டியில் போட விருப்பமோ அவற்றைப் போட்டுவிட்டு மிச்சத்தைத் தேர்தல் அதிகாரி (polling officer) முன்னிலையில் இருக்கும் பெட்டியில் அவர் காணக்கூடிய நிலையில்—ஆனால் கணக்கீடு செய்ய முடியா நிலையில்—காப்பாகப் போட்டுவிட்டு வெறுங்கையைக் காட்டிவிட்டு வெளியே சென்றுவிடல் வேண்டும். இப்படிச் செய்து பார்க்கும்போது எந்தெந்த ஆசிரியர் மாணவர்களிடம் கூட்டாக எவ்வளவு மதிப்புகளைப் பெறுகிறார் என்பதைத் தெரிந்துகொள்ளலாம். இந்த மதிப்பீடுகளின் அடிப்படையில் எந்தவிதமான ஒழுங்கு நடவடிக்கையும்—பாராட்டும் தண்டனையும் தரப்படுதல் கூடாது. இது வெறும் மனச்

சான்று மதிப்பீடாக (Concious poll-evaluation) மட்டுமே இருத்தல் வேண்டும். இல்லையேல் இதிலும் ஊழலும் மோசடியும் உட்புகும். இந்த இடத்தில் ஒரு வினு எழலாம். அஃது ஆசிரியர்களுடைய தகுதியை எப்படி அப்புறம் கண்டறிதல் என்பது. இதை அவர்கள் எழுதும் கட்டுரைகள் / நூல்கள், நிகழ்த்தும் சொற்பொழிவுகள், மேற்பார்வை செய்யும் ஆராய்ச்சிகள் இவற்றைக் கொண்டே முடிவு செய்தல் வேண்டும். தேர்தல் முறை தில்லுமுல்லுகளுக்கு இரை யாக்கப்படுதல் எளிது என்பதை எப்போதும் உணர்தல் வேண்டும். அதனுல் அந்த அளவுகோலை ஆசிரியர் மதிப்பீட்டு முறையில் எச்சரிக்கையாகப் பயன்படுத்துதல் வேண்டும்.

5. முதுகலை வகுப்பு மாணவர்களுக்குத் தரும் வீட்டு வேலை கள் (Home assignments) பெரும்பகுதி சொல்லடைவு, பொரு ளடைவு செய்யும் பயிற்சிகளாகவே அமைதல் வேண்டும். காரணம் அப்போதுதான் மாணவர்கட்குத் துல்லிய அறிவு ஏற்படும். சொல் லடைவுகளில் இப்பொழுது பெரும்பாலான மொழித்துறை ஆய் வேடுகள் பின்பற்றும் முறையையே பின்பற்றல் பயன்தரும். எடுத்துக்காட்டு : டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம் அவர்களின் Purananuru Index. அஃதாவது சொற்களுக்குப் பொருள்களோடு இலக்கணக் குறிப்புக்களும் அவை வரும் இடங்களும் குறிக்கப்படல் வேண்டும். இலக்கணக் குறிப்புக்களைக் குறிக்கும் பழக்கத்தால் மாணவர்களுக்கு நடைமுறையில் இலக்கண அறிவு துல்லியமாய்த் தெளிவுபெறும். சந்திப் பிழைகளைச் சில அடிப்படை விதிகளை மனனம் செய்ய வைப்பதன் மூலமே முக்கால் பகுதிக்கு மேல் நீக்கி விடலாம்.

6. முதுகலை வகுப்புக்களில் மாணவர்கள் கலைக்களஞ்சியங் களையும் அகராதிகளையும் பயன்படுத்தும் பழக்கத்தைக் கட்டாயமாக மேற்கொள்ளச் செய்ய வேண்டும். இவ்வாறு அவர்கள் பயன் படுத்துதற்கு ஏற்ற வகையில் கலைக்களஞ்சியத் தலைப்புக்களைத் தக்க வாறு வகைதொகை செய்து நூல்கள் வெளியிடல் வேண்டும். இயலுமேல் அத்தகைய புதிய வகைதொகைகளின் அடிப்படையில் கட்டுரைத் தொகுப்புக்களை மையொற்றுப்படி செய்தேனும் தருதல் வேண்டும். தக்க இசைவு(கள்) பெற்று அச்சீடு செய்தால் மிக்க பயன்தரும். மாணவர்கள் கலைக்களஞ்சியங்கள், அகராதிகள் ஆகியவற்றைப் படித்த பாட்டிற்குப் பயன்தரும் வகையில் வினுக் களும் கட்டாயமாக ஒவ்வொரு பாடப் பகுதியிலும் ஒன்றேனும் அமை தல் வேண்டும். அந்த வினுக்கள் பெருமதிப்புடைய வினுக்களுள் ஒன்ருய் விளங்கல் வேண்டும். முதுகலை வகுப்புக்களில் வாரத்தில் ஒவ்வொரு மணி நேரம் நூலகப் படிப்பிற்கென்று ஒதுக்கப்பட்

டுள்ளது. இந்தக் காலத்தை மாணவர்கள் செவ்வனே செலவழிப் பதை அளந்து பார்க்கச் சிறந்த முறையும் இதுவாகும்.

7. முதுகலை வகுப்பு மாணவர்கள் கூடியவரை தங்கள் படிப்புத் தொடர்புடைய பிற துறைகளோடு தொடர்பு கொண்டு அத் துறைகளின் அறிவின் எல்லைகளை (Horizons of knowledge) அறிந்துகொள்ள முயலல் வேண்டும். இவ் வகையில் அவர்கள் நூலகத்தில் தங்கள் படிப்புத் தொடர்பாக உள்ள நூல்கள் / இதழ் கள் பலவற்றையும் பார்வையிடல் வேண்டும். தொடர்புடைய துறைகளில் உள்ள படங்கள், அருங்காட்சிப் பொருள்கள் முதலி யவற்றையும் ஆர்வத்துடன் காணல் வேண்டும். சிறப்பாக மானிட வியல் துறை, தொல்பொருளியல் துறை, புவியியல் துறை, இன் கலை-நுண்கலைத் துறை, இயற்கை அறிவியல் துறைகள் இவற்றோடு தொடர்பு கொள்ளல் வேண்டும். எல்லாத் துறைகளிலும் வரும் எல்லாவகையான புத்தகங்கள்—இதழ்கள்—ஆராய்ச்சிக் கட்டுரை கள் ஆகியவற்றின் நோக்கையும் போக்கையும் மேற்போக்காகவேனும் தெரிந்துகொள்ளல் வேண்டும். இக் கல்வி புதிய முதுகலைத் திட்டத்தில் உள்ள 'கட்டுரை'த் தேர்வுத்தாளுக்கும் பயன்படும்.

8. முதுகலை வகுப்பு மாணவர்கள் அடிக்கடி கருத்தரங்கு களையும் விவாத அரங்குகளையும் தக்க ஆசிரியர்களின் மேற்பார்வை யில் நடத்தித் தங்கள் அறிவையும் ஆற்றலையும் உரியவகையில் வளர்த்துத் தங்கள் புலமை அகலமும் ஆழமும் உடையதாகச் செய்துகொள்ள வேண்டும்.

9. நம் இளைஞர்கள் கூட்டுவேலை—குழுவேலை (group-work/team-work) செய்து பழக வேண்டும். ஒற்றுமை இல்லாமல் சீரழியும் இந்த நாட்டிற்கு / இந்த இனத்திற்கு உற்ற மருந்து அது. முதுகலை மாணவர்கள் தங்கள் பாடங்கள் தொடர்பாக அடங்கல் / அடைவுகள் தயாரித்தல், பாடத் தொடர்பாக இதழ் களில் வரும் செய்திகள், படங்களைக் கத்தரித்து ஒட்டி, படக்கோவை (Album) தயாரித்தல், கூட்டாக இலக்கியங்களைப் படைத்தல் (இரட்டைமணிமாலை, மும்மணிக்கோவை, நான்மணிமாலை, அந் தாதி போல்வன), நாவல்கள், நாடகங்கள் எழுதுதல் முதலிய கூட்டுப் பணிகள் புரிந்து இன்பமும் பயனும் எய்தலாம். அப் பணிகள் வகுப்பில் யாரொருவர் ஒத்துழைப்பும் முயற்சிக் கூட்டும் இல்லாததாய் இருக்கக் கூடாது. அதுவே நிபந்தனை.

———

## நாட்டுப்புறக் கலைகளை நாடிப் பேணுவோம்

[புலவர் பொன். முனியப்பன், கூவலூர்.]

### தரவு

இமிழ்கடல்சூழ் முதல்நிலமாய் எழுந்துயர்ந்த குமரிதன்னில்
அமிழ்துநிகர் கலைபடைத்தும் அறிவொழுக்கங் களைவளர்த்தும்
இருந்தநிலை தனைக்காண இருகண்ணும் அவாவுகையில்
சிறுஊர்கள் தாம்அதனில் சிலவற்றை அழியாமல்
காத்தின்று வருவதனைக் கருத்துடனே வளர்த்துவந்தால்
பூத்தகலை சிறந்தோங்கும் புதுக்கலையும் முகிழ்க்குங்காண்.

### தாழிசை

சிற்றூரில் நிகழ்ந்தின்றுஞ் சிறந்தோங்குங் கலைகளினை
முற்றிலுமே தெரிந்துணர முடியாமற் போனாலும்
உற்றகழைக் கூத்து,கிளித் தட்டு,உயர் [1]விச் சுளியாடல்
வெற்றிதருஞ் சிலம்பு,[2]ஓரை விளையாடிப் போற்றிடுவோம். 1

ஒயிலாட்டம் பொம்மைகளின் உயிராட்டம் பாம்பாட்டம்
மயிலாட்டம் பொய்க்கால்கொள் [3]மாவாட்டம் கழங்காட்டம்

---

1. விச்சுளியாடல் - வானளாவிய கம்பு ஒன்றின் உச்சியில் ஏறி, ஒரு பொருளை வானத்தில் வீசி எறிந்து, கம்பைவிட்டுத் துள்ளிக்குதித்து ஒரு சுழி விண்ணில் சுற்றி, முதலில் எறிந்த பொருளைக் கவ்விக்கொண்டு திரும்பவும் கம்பின் உச்சியை அடைதல். மிக விரைவாய் ஒருசில நொடிப் பொழுதில் இது நிகழ்ந்துவிடும். காண்போரை மயிர்க் கூச்செறியச் செய்யும் விளையாட்டு இது.

2. ஓரை - நீர் விளையாட்டு என்றும், நீருள் எதிர்த்து விளையாடுதல் என்றும் இதனைக் கூறுவர். தம் கூற்றையே ஏற்கச்செய்ய மீண்டும் மீண்டும் முயலுஞ் செயலை, இன்றும் கொங்குநாட்டில் 'ஓரியாடாதே' என்பர்.

3. மாவாட்டம் - மா - விலங்கு. பொய்க்கால் கொள் என்னும் அடைமொழியைச் சேர்த்து, 'பொய்க்கால் குதிரை, காளை, ஆ' என்ற மூன்றையுங் கொள்க. அடைச்சொல் இன்றி, புலி போன்ற பல்வேறு விலங்கு வேடமிட்ட ஆட்டங்களையுங் கொள்க.

குயிலிசைசேர் காவடிகள் கும்மியுடன் கோலாட்டம்
பயில்பந்து கரணமுடன் [4]பாண்டியையும் போற்றிடுவோம். 2

உலையாத கரகாட்டம் உவகைமிகு கதைக்கூத்து
அலைபாயும் மஞ்சுவிரட்டு அம்மானை விடுகதைகள்
தலையாய தெம்மாங்கு தனித்தீர்க்கும் நையாண்டிக்
கலைகளினை அடைந்துளநாம் கருத்துடனே போற்றிடுவோம். 3

தனிச்சொல்

எனவாங்கு

சுரிதகம்

நாட்டுப் புறத்தினர் நயமுற வளர்க்கும்
பாட்டைக் கூத்தைப் பயன்மிகு கலைகளைப்
போற்றிக் காத்தலும் புரத்தலும் தமிழரின்
ஆற்றல் காட்டிநல் அழகை ஈவதால்,
ஏணியாய் நம்மை ஏற்றலால்,
பேணி வாழ்வதே பெருமை ஆகும் !

———

## யாரைக் கேட்பது ?

"இந்தி நுழைவால் தமிழ் கெடுமா, கெடாதா என்பதற்குப் பதில் நாம் யாரைக் கேட்போம்? மறைமலையடிகளையும், திரு. வி. க. வையும் கேட்பதா அல்லது கனம் கோபால் ரெட்டியாரையும், காளா வெங்கட்ராவையும் கேட்பதா ? மறைமலையடிகளாரும், திரு வி. க அவர்களும் இந்தி நுழைவால் தமிழ் கெடும்; தமிழர் கலாச்சாரம் கெடும் என்று அழுத்தந் திருத்தமாகக் கூறிவிட்ட பிறகு, அவர்கள் சாட்சி நமக்குக் கிடைத்துவிட்ட பிறகு, போர் முழக்கம் செய்வதைத் தவிர, போர் முரசு கொட்டுவதைத் தவிர நமக்கு வேறென்ன வேலை இருக்கிறது ?"

பேரறிஞர் அண்ணா

(1938 இந்தியெதிர்ப்பு மாநாட்டுச் சொற்பொழிவு)

---

4. பாண்டி - இது வட்டமான சிறு பானை ஓட்டுத் துண்டைக் குறிக்கும். தரையில் இரட்டையாக மூன்று, நான்கு, ஐந்து அடுக்கு வரை கட்டங்கீறி அக் கட்டத்தில் பாண்டித் துண்டினை இட்டு விளையாடுவர் சிறுமியர்.

# செய்திகளும் குறிப்புக்களும்

## பெரியார் நூற்ருண்டு விழா

பகுத்தறிவுத் தந்தை பெரியார் ஈ.வே இராமசாமி அவர்களின் நூற்ருண்டு விழாவைத் தமிழ் நாட்டரசு சிறப்புறக் கொண்டாடி வருகின்றது. இவ்வாண்டு முழுதும் தமிழ்நாட்டில் ஆங்காங்குள்ள பேரூர்களில் இவ் விழா நடைபெறு கின்றது. முதலில் பெரியார் பிறந்த ஊரான ஈரோட்டிலும், அடுத்து மதுரையிலும், சென்ற திங்களில் வேலூரிலும் பெரியார் நூற்ருண்டு விழாக்கள் நடைபெற்றன. அடுத்து நெல்லையில் நடைபெறவிருக் கின்றது.



27—5—67இல் தந்தை பெரியார் அவர்கள், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் சார்பில் நெல்லையில் இயங்கிவரும் சிவஞான முனிவர் நூல் நிலையத்திற்கு வருகை தந்து சிறப்பித்ததை நினைவு கூர் கின்ருேம். அப்பொழுது பெரியார் அவர்கள் நூல்நிலையத்திற்கு வழங் கிய கருத்துரை வருமாறு :

"27—5—67 திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரின் அன்பான விருப்பப்படி சிவஞான முனிவர் நூல் நிலையத்தைக் காணும்படியான நல்வாய்ப்பினைப் பெற்றேன். நூல்நிலையம் அருமையான கட்டிடத்தில் மிகவும் ஒழுங்கான முறையில் அமைந்திருப்பதைக் கண்டு மகிழ்ந்தேன். ஏராள மான எல்லாத் துறையைச் சார்ந்த புத்தகங்களும் வைக்கப் பட்டிருப்பதுடன் நல்ல ஒழுங்கு முறைப்படி நிருவகிக்கப்பட்டு வருவதுடன் பொதுமக்களுக்கு மிகுதியும் பயன்பட்டு வருகிறது. மனமாரப் பாராட்டுகிறேன்."

கழக ஆட்சியாளர் அவர்கள் பெரியார் நூற்ருண்டு விழாக் குழுவில் உறுப்பினராக இருக்கிருர்கள். ஆயினும் முதுமையின் காரணத்திஞல் வெளியூர்க்குச் செல்ல இயலாமையால் விழா நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ள முடியவில்லை. எனினும் ஒல்லும் வகையில் உறுதுணை நின்று பணியாற்றி வருகின்ருர்கள்.

## 36ஆவது தமிழிசை விழா

தமிழிசைச் சங்கத்தின் 36ஆவது விழா அரசர் அண்ணுமலை மன்றத்தில் 22-12-78 முதல் 2-1-79 முடியத் தொடர்ந்து பன்னிரு நாள்கள் நடைபெற்றது. தமிழிசைச் சங்கத்தின் புதிய தலைவராகப் பொறுப்பேற்றிருக்கும் மேனுள் உயரற மன்ற நடுவர் திருமிகு மகராசன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்திஞர். சட்ட மேலவைத்

தலைவர் மாண்புமிகு ம. பொ. சிவஞானம் அவர்கள் விழாவைத் தொடங்கி வைத்தார். திருவாட்டி எம். எல். வசந்தகுமாரி அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினார். அவருக்கு "இசைப் பேரறிஞர்" என்னும் விருதும் பொற்பதக்கமும் சான்றிதழும் அளித்துத் தமிழிசைச் சங்கம் அவரைப் பாராட்டியது.

24-12-78 முதல் 27-12-78 முடிய நான்கு நாள்களிலும் முற்பகல் நேரங்களில் பண்ணாராய்ச்சியின் இருபத்தெட்டாம் ஆண்டுக் கூட்டம் அரசர் அண்ணாமலை மன்றத்தில் நடைபெற்றது. நாள் தோறும் இசை நடன நாடக நிகழ்ச்சிகள் வழக்கம் போல் சிறப்பாக நடைபெற்றன. அரிய கட்டுரைகள், பாடல்கள், கலைஞர்களின் படங்கள் முதலியவற்றைத் தாங்கியுள்ள மலர் வெளியிடப்பட்டது.

## தமிழ் மாநில இந்தி எதிர்ப்பு மாநாடு

1978 திசம்பர் 23, 24ஆம் நாள்களில், திருச்சிராப்பள்ளியில் தமிழ் மாநில இந்தி எதிர்ப்பு மாநாடு நடைபெற்றது. திரு. அன்பில் தர்மலிங்கம் வரவேற்புரை நிகழ்த்தினார். முன்னாள் சட்டமன்ற அவைத் தலைவர் புலவர் கோவிந்தன் அவர்கள் மாநாட்டிற்குத் தலைமை தாங்கினார். நாடாளுமன்ற உறுப்பினர் திரு. வை. கோபால் சாமி எம் ஏ; பி எல் மாநாட்டைத் திறந்து வைத்தார். முத்தமிழ்க் காவலர் திரு கி ஆ பெ. விசுவநாதம் அவர்கள் பெரியார் படத்தையும், திரு. கி. வீரமணி அவர்கள் பேரறிஞர் அண்ணா அவர்களின் படத்தையும் திறந்துவைத்து உரையாற்றினர். பேராசிரியர் அன்பழகன் அவர்கள் இந்தி வல்லாண்மை எதிர்ப்புத் தீர்மானத்தை முன்மொழிந்து அரும்பெரும் உரையாற்றினார். தீர்மானங்களை வழி மொழிந்து டாக்டர் கலைஞர் கருணாநிதி அவர்கள் சிறப்புமிக்க பேருரை ஆற்றினார் மற்றும் பல தமிழ் அன்பர்களும் அரசியல் தலைவர்களும் உரையாற்றினர். மாநாட்மல் இந்தி ஆதிக்கத்தை எதிர்த்துப் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. மாநாட்டில் பன்னூருயிரக்கணக்கான மக்கள் குழுமி இருந்தனர்.

## தமிழகத் தமிழ்க் கல்லூரி ஆசிரியர் மன்றம்

தமிழகத் தமிழ்க் கல்லூரி ஆசிரியர் மன்றத்தின் பொதுக்குழுக் கூட்டம் 17-12-78இல் கரந்தைப் புலவர் கல்லூரியில் நடைபெற்றது. பேராசிரியர் அ கிட்டிண மூர்த்தி, எம் ஏ., பி. எல். அவர்கள் கூட்டத் திற்குத் தலைமை தாங்கினார் புலவர் பி. விருத்தாசலம் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார். பி லிட் பட்டப் படிப்புக்கு ஆக்கம் அளிக்கும் வகையிலும், வேலையில்லாதிருக்கும் தமிழாசிரியர்கட்கு வேலைவாய்ப்புக்கள் அளிக்கும் வகையிலும் தமிழ்ப் பல்கலைக் கழகம் ஒன்றினை விரைவில் உருவாக்க வேண்டும் எனக் கோரியும் 15 தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. புலவர் பெருமக்கள் பலர் கருத்துரை வழங்கினர்.

## திருவாதிரைத் திருநாளும், பொங்கல் திருநாளும்

நெல்லைநகர் திருக்கோயில் வளர்ச்சிப் பணி மன்றத்தின் சார்பில் நெல்லையப்பர் திருக்கோயில் நின்ற சீர்நெடுமாறன் அரங்கில் முறையே 11, 12-1-79ஆம் நாள்களில் மார்கழித் திருவாதிரை

நன்னுள் கொண்டாடப்பட்டது. அடுத்து முறையே 13, 14,–1-79 ஆம் நாள்களில் தைப் பொங்கல் திருநாள் சிறப்பாகக் கொண்டாடப் படுகிறது. இந் நான்கு நாட்களிலும் சமயக் குரவர்களின் பெருமைகளைப் பற்றித் திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கள் சொற்பொழிவாற்றுகிருர்கள்.

## ''கலைஞர் கண்ட வள்ளுவர் கோட்டப் பதிகம்'' வெளியீட்டு விழா

''கலைஞர் கண்ட வள்ளுவர் கோட்டப் பதிகம்'' என்னும் கவிதை நூல் வெளியீட்டு விழா 21-12-78 மாலை சென்னை மாவட்ட மைய நூலக மண்டபத்தில் முன்னுள் மேயர் திரு சா. கணேசன் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. டாக்டர் மெ. சுந்தரம் நூலை வெளியிட்டுச் சொற்பொழிவாற்றினுர். மற்றும் பல அறிஞர்கள் உரையாற்றினர்.

## திருவிடை மருதூரில் திருவாசக விழா

திருவாவடுதுறை ஆதீனத்தின் சார்பில் மணிவாசகப் பெருமானின் திருவாசகத்திற்குச் சிறப்பு விழா 1979 சனவரி 18, 19, 20 ஆகிய மூன்று நாள்களில் நடைபெறும். இந்தியப் பிரதமர் மாண்புமிகு மொரார்சி தேசாய் விழாவில் கலந்துகொண்டு உரை நிகழ்த்துவார். நீதிபதி இசுமாயில் போன்ற பேரறிஞர்கள் கலந்துகொள்ளும் இவ் விழாவில் டாக்டர். தெ. பொ. மீ. திரு. ஜி. வன்மீகநாதன், K. சுவாமிநாதன் போன்ற பெரியார்கட்குப் பாராட்டு நடைபெறும். திருவாசகம் தொடர்பான பதிப்புக்கள் அனைத்தையும் கொண்ட நூல், படக் காட்சியை மறைமலையடிகள் நூல்நிலையம் இவ் விழாவில் அமைக்க ஏற்பாடு செய்துள்ளது.

## கழக ஆட்சியாளர்க்குச் 'செந்தமிழ்ச் செல்வர்' பட்டம்

தமிழக வரசு, சிறந்த தமிழ்ப்பணி ஆற்றிவரும் பெருமக்களான மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர், திரு. கா. அப்பாத்துரையார், சை. சி. நூற்பதிப்புக் கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை, அவிஞசிலிங்கம் செட்டியார், பெரியசாமித் தூரன் ஆகியோர்க்குச் செந்தமிழ்ச் செல்வர் என்னும் விருதினை வழங்குவதென்று முடிவு செய்துள்ளது. அவ் விருது வழங்கு விழா 15-1-79 இல் வள்ளுவர் கோட்டத்தில் நடைபெறும். இவ் விழா பற்றிய விரிவான செய்திகள் அடுத்த இதழில் இடம்பெறும்.

## தொழிலதிபர் திரு. எம். எம். முத்தையா அவர்கள் மறைவு

ஏ.எம் எம். குழுவின் சார்பில் நடைபெறும் பல்வேறு தொழில் நிறுவனங்களின் அதிபரும், சிறந்த தொழில்துறை அறிஞருமான திரு. எம். எம். முத்தையா செட்டியார் அவர்கள் 6-1-79இல் காலமாஞர்கள் என்ற செய்தி அறிந்து வருந்துகிறேம். இவர் தம் தந்தையார் காலஞ்சென்ற ஏ எம். எம் முருகப்பச் செட்டியார் அவர்கள் நம் கழக ஆட்சியாளரிடம் நன்மதிப்பும், கழகத்தோடு தொடர்பும் கொண்டு வாழ்ந்தது போலவே இவரும் கழகத்துடன் தொடர்பு கொண்டிருந்தமை குறிப்பிடத்தக்கது. மறைந்ததிரு. செட்டியார் அவர்களின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேம்.

## தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் பற்றி டாக்டர் வ. சுப. மாணிக்கம்

காரைக்குடி தமிழ் வளர்ச்சி உயர் ஆராய்ச்சி மைய இயக்குநரும் தமிழ்ப் பேராசிரியருமான டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் அண்மையில் தமிழக அரசு செய்துள்ள தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் பற்றி நீண்டதோர் அறிக்கை விடுத்துள்ளார். அதில்,

"இச் சீர்திருத்தம் வேண்டும் எனத் தமிழக அரசு கருதினால் தமிழ்ப் புலவர்கள், எழுத்தாளர்கள், மொழியியலாளர்கள், தாளாசிரியர்கள், அச்சாளர்கள் என்றிவர்களை அழைத்து எழுத்துச் சீர்திருத்தக் கருத்தரங்கு ஒன்று கூட்டிப் பல்வேறு உண்மைகளை நேரடியாகத் தெரிந்துகொள்ளவேண்டும். இதுவே அரசு தமிழ் மொழிக்கு வழிகாட்டும் நன்னெறியாகும். இவ் வேண்டுகோட்படி எழுத்துக் கருத்தரங்கு நடைபெறும் என்று எதிர்பார்க்கிறேன்" என்று கூறியுள்ளார்.

### மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் பரல்-௪, ௧௬௧ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| உயர்திரு வ. சுப்பையா பிள்ளை (கழக ஆட்சியாளர்—டிச. 78) | ரூ. 10 00 |
| ,, ஆ. சுப்பையா பிள்ளை (கழக மேலாளர்—டிச. 78) | ரூ. 5 00 |

# மதிப்புரை

## கௌமார விளக்கம்

[ஆசிரியர்: தவத்திரு முருகதாச அடிகள், கிடைக்குமிடம்: கௌமார மடாலயம்; திருவாமாத்தூர் (அஞ்சல்) தெ. ஆ. (மா. வ). விலை: உரு 2-00]

"கௌமார விளக்கம் என்னும் அறுசமய வழிபாட்டு முறைத் தொகுப்பு" எனப் பெயர் கொண்டுள்ள இந் நூல் சிரவணபுரம் கௌமார மடவளாகத்தின் தலைவர் தவத்திரு சுந்தரம் அடிகளின் பொன்விழா மலராக வெளியிடப்பட்டுள்ளது. வண்ணச்சரபம் தவத்திரு தண்டபாணியடிகளின் கருத்துக்களைத் தழுவித் தவத்திரு முருகதாச அடிகள் இந் நூலை எழுதியுள்ளார். அறுசமய வழிபாடுகளை அறிய விரும்புவோர்க்கு இது பயன்படும்.

## பாளையங் கோட்டை எச். ஏ. கிருஷ்ண பிள்ளை கிறிஸ்தவனான வரலாறு (தன் வரலாறு)

[பதிப்பாசிரியர்: டாக்டர் வீ. ஞானசிகாமணி, எம்.ஏ., பி.எச்.டி. டிப். தெலு. வேதாகம மாணவர் பதிப்பகம், 7, அங்காடித் தெரு, அயன்புரம், சென்னை-23. விலை: உரு 2.50.]

இந்நூலில் திரு கிருட்டிணபிள்ளை அவர்களின் பிறப்பு வளர்ப்பு, படிப்பு, மேற்கொண்ட பணிகள், கிறித்தவராகத் திருமுழுக்குப் பெற்ற வரலாறு இன்னபிற சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 80, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: வ. சுப்பையா.

## கழக நிலையங்களில் கிடைக்கும்

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| நூல் — ஆசிரியர் | ரூ. | பை. |
|---|---|---|
| திருக்குறளும் இந்திய அறநூல்களும் —க. த. திருநாவுக்கரசு | 4 | 20 |
| குறள் அறிமுகம்—இரா. மதிவாணன் எம்.ஏ., பி.லிட். | 5 | 50 |
| குறள்வழி பிராகிருத இலக்கிய இன்பம் ,, | 3 | 50 |
| ஆந்திரநாட்டு அகநானூறு ,, | 10 | 50 |
| நரிக்குறவர் பழங்குடி மக்கள் —டாக்டர் கோ. சீனிவாசவர்மா | 4 | 00 |
| அன்பின் அலைகள்—கௌரிராஜன் | 5 | 00 |
| இராமானுசர்—காழியூர் சேஷாத்திரி மணவாளன் | 4 | 50 |
| சூரிய நமஸ்காரம்—டி. வி. திருவேதி | 3 | 00 |
| இலையுதிர் காலத்து இரவுகள்—நா. பார்த்தசாரதி | 1 | 50 |
| ஆயகலைகள் அறுபத்திநான்கு—புலவர் செந்துறைமுத்து | 20 | 00 |
| பரிபாடலில் பழக்க வழக்கங்கள் ,, | 7 | 50 |
| சூரியன் மேற்கே உதிக்கிறன்—கோவி மணிசேகரன் | 6 | 75 |
| பாரதியாரின் இலக்கியச்சோலை—டி. வி. எஸ். மணி | 5 | 00 |
| மாவீரன் நெப்போலியன்—அ. லெ. நடராசன் | 12 | 50 |
| மண்ணில் விண் அல்லது வள்ளுவர் கூட்டுடமை —ஞா. தேவநேயன் | 12 | 00 |
| சிறையில் பூத்த சின்னஞ்சிறு மலர்கள் —கலைஞர் மு. கருணாநிதி | 1 | 50 |
| மகளிர் ஒப்பனைக்கலை—வள்ளி நாயகி | 5 | 50 |
| மகளிர் குடும்பக்கலை—புலவர் செந்துறைமுத்து | 5 | 00 |
| பெண்களுக்கான யோகாசனங்கள் —சரோஜனி ஆண்டியப்பன் | 4 | 00 |
| தெரிந்தும் தெரியாத தாவரங்கள்—உறையூர் வளவன் | 5 | 00 |
| பெருமாளே சாட்சி—கோமல் சுவாமிநாதன் | 5 | 00 |
| தோட்டத்திற்கு வெளியிலும் சில பூக்கள்—வண்ணதாசன் | 5 | 50 |
| அன்பு தருவது தன்னையே—ஏ. வி. சுப்பிரமணியன் | 10 | 00 |
| தெய்வத் திருவருட் செல்வம்—புலவர் சி. முத்துப்பிள்ளை | 6 | 00 |
| அதிஷ்ட ஜோதிட கணிதம்—பூபதிராஜா | 6 | 00 |
| இதயமலர்கள்—கே ஆர். வாசுதேவன் | 7 | 00 |
| காணிநிலம் வேண்டும்—பூவை. எஸ். ஆறுமுகம் | 10 | 00 |
| Padayachi Dialect of Tamil—K. Ramasamy | 8 | 00 |

